|| श्रीः ||

# || यक्षप्रश्नः ||

# யக்ஷ பிரச்னம்

## யக்ஷன் வினவும் - -
## - - யுதிஷ்டிரர் விடையும்

( தமிழ் உரை விளக்கத்துடன் )


தமிழாக்கியவர் :

வித்வான்

ஸ்ரீ கண்ணன் அய்யங்கார்

ஸ்ரீரங்கம்,



பிரசுரிப்பவர் :

ஸ்ரீ ராமாயண ஸபை

ஈரோடு

1969

# முன்னுரை

நம் ஹிந்து மதத்தைக் காப்பாற்றி வளர்த்த குருக்களின் பரம்பரையில் ஸ்ரீ வியாஸாச்சாரியார் மிகப்பெரியவர். ஸ்ரீமத் பாகவதம் முதலான 18 புராணங்கள், மகா பாரதம், பிருஹ்ம ஸூத்திரங்கள் முதலிய மகா கிரந்தங்களை இவர் இயற்றியுள்ளார். 'வேதத்துக்கு ஸமானமானது மஹாபாரதம்'' (भारतः पञ्चमो वेदः) என்று சொல்வதுண்டு கர்ம காண்டம், பக்திகாண்டம், ஞானகாண்டம் இவைகளைத் தெளிவாக கதைகளில் சேர்த்து ஸ்ரீவியாஸர் உபதேசித்திருக்கிறார். இதில் ஸாமான்யதர்மம், ராஜதர்மம் முதலிய தத்துவங்கள் ஆங்காங்கு விளக்கப்பட்டிருக்கின்றன. மகா பாரதத்தில் சொல்லப்படாத விஷயமே கிடையாது என்றே சொல்லவேண்டும். இதில் மோக்ஷ தர்மம் மிகவும் தெளிவாகக் காட்டப்பட்டிருக்கிறது.

இது 18 பர்வாக்கள் ( பாகங்கள் ) கொண்டது அவைகளில் வனபர்வாவில் உள் பாகமான ஆரணேய பர்வாவில் அடங்கியது யக்ஷபிரச்னம் என்பது. இதில் ஸநாதன தர்மத்தின் முக்ய தத்துவங்கள் விளக்கப்பட்டிருக்கின்றன. எந்த விஷயத்தை விளக்கினாலும் கேள்வியும் பதிலும் என்ற முறைதான் சிறந்தது என்பது நமது சாஸ்திரங்களின் கொள்கை அதை ஒட்டியே தலைப்பில் கண்டபடி இது பூராவும் ஒரு யக்ஷனின் கேள்விகளும் அதற்கு தர்மபுத்திரரின் பதிலுமாக உள்ளது. இந்த சுலோகங்களில் பலவற்றை தினசரி பல இடங்களில் கேட்கிறோம். எங்கு இது உள்ளது என்றோ அவைகளின் துடர்ச்சியையோ நாம் தெரிந்துகொள்வதில்லை.

இது ஏற்பட்ட சந்தர்ப்பம் இப்புத்தகத்தின் ஆரம்பத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. தர்மதேவதையாகிய யக்ஷஸ் யுதிஷ்டிரரை பரீக்ஷிக்க இந்தக்கேள்விகளை கேட்க விரும்பினபோது, यथाप्रज्ञं तु ते प्रश्नान्प्रतिवक्ष्यामि पृच्छ माम् ।

''என் சக்தியை அனுசரித்து உன் கேள்விகளுக்கு பதில் சொல்கிறேன், கேட்கலாம்'' என்கிறார். கேள்வி கேட்கும் ஸ்வரூபம் தர்ம தேவதை, பதில் சொல்பவரோ ஸ்ரீ ராமசந்திரமூர்த்தியைப்போல் विग्रहवान्धर्मः தர்மமே உருவெடுத்தவர். உலகுக்கு உபதேசம் செய்யவேண்டி

அர்ஜுனனை நிமித்தமாகக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா பகவத் கீதையை சொன்னதுபோல் கர்மத்தின் தத்துவங்களை விளக்க இந்த யக்ஷப்ரச்னத்தை ஸ்ரீ வியாஸ பகவான் சேர்த்திருக்கிறார்.

ஈரோடு ராமாயண ஸபையின் ஆதரவில் சில மாதங்களுக்கு முன்பு ஸ்ரீரங்கம் உபயபாஷா பண்டிதரான ஸ்ரீ கண்ணன் அய்யங்கார் அவர்களால் ஸ்ரீ மஹாபாரத பிரவசனம் நடந்தது அப்போது யக்ஷ பிரச்னத்தை அவர் விளக்கி 124 கேள்விகளையும் அவைகளுக்கு கொடுக்கப்பட்ட பதில்களையும் திருக்குறள் முதலிய இதர கிரந்தங்களிலிருந்து மேற்கோள்களுடன் எடுத்துச்சொன்னார். இது கேட்ட மக்கள் இதைத் தனிப்புத்தகமாக, தமிழாக்கத்துடன் பிரசுரித்தால் நலமாகும் என்றார்கள். தர்மத்தை உபந்யாஸ சமயங்களில் மட்டும் கேட்டால் அதை சாசுவதமாக மனதில் பதிய வைத்துக்கொள்வது கடினமாகிறது. ஆனால் இவை சிறு புத்தகங்களாக வெளிவந்து எளிய விலையில் கிடைத்தால் அடிக்கடி படித்து அதன் பிரயோஜனத்தை நன்கு பெறுவதற்கு சந்தர்ப்பம் ஏற்படுகிறது. இதை உத்தேசித்தே ஈரோடு ராமாயண ஸபையாரால் இப்புத்தகம் வெளியாக்கப் படுகிறது.

மிகுந்தசிரமம் எடுத்துக்கொண்டு தமிழாக்கமும், விளக்கமும் கொடுத்து அனுகிரகித்த ஸ்ரீ கண்ணன் அய்யங்கார் அவர்களை நாம் மறக்கமுடியாது, பொதுமக்களுக்கு பேருதவி செய்திருக்கிறார். இவருக்கு எங்கள் நன்றி உரித்தாகுக.

வெகு சீக்கிரத்தில் அழகிய முறையில் அச்சிட்டுக் கொடுத்த புராதன தர்ம உபதேசக அச்சகமான ஸ்ரீரங்கம் ஸ்ரீ வாணீ விலாஸ் நிலயத்துக்கு எங்கள் மனமார்ந்த வந்தனத்தை தெரிவித்துக்கொள்கிறோம்.

இப்புத்தகத்தை எல்லோரும் வாங்கிப்படித்து தர்மத்தின் தத்துவங்களை செவ்வனே உணர்ந்து கூடிய மட்டும் அவைகளை அனுசரித்து வாழ்க்கையை நடத்தினால் அதுவே இச்சபையார் வேண்டுவதாகும்.

ஈரோடு,
30—10—69

K. V. சுப்பரத்னம் (வக்கீல்)
ராமாயணசபை, உபதலைவர்

॥ श्रीः ॥

॥ श्रीकृष्णाय परब्रह्मणे नमः ॥

# यक्षप्रश्नः

## யக்ஷன் வினவும் யுதிஷ்டிரர் விடையும்.

नारायणं नमस्कृत्य नरं चैव नरोत्तमम् ।
देवीं सरस्वतीं व्यासं ततो जयमुदीरयेत् ॥

"அரசே! இக்குலத்தில் எந்தக் காலத்திலாவது அசிரத்தையால் அறமோ, அர்த்தமோ அழிந்துளதா? எவ்வுயிர்க்கும் நன்மையே செய்துவந்த நாம் இன்று ஒரு அந்தணனுக்கு நேரிட்ட துயரைப்போக்க இயலாது, சொன்ன சொல்லைக் காக்கமுடியாத நிலையிலுள்ளோமே" என வருத்தமும் சினமும் பொங்கக் கூறினன் தருமரை நோக்கி நகுலன்.

காரணம் மாயச் சகுனியால் வஞ்சகச் சூதாடித் தோல்வியுறச் செய்த பாண்டவர்கள் வனத்தில் வாழ்ந்து வருகின்றனர். ஆண்டுகள் பன்னிரண்டு கழிந்தன. துவைதவனத்தில் ஒருநாள் தனது வேள்விக்குரிய அரணியுடன் கூடிய கடைகோலை மானொன்று பறித்துச் செல்கிறதே என முறையிடுகிறான் அந்தணனொருவன் பாண்டவர்கள்பால் வந்து. தன் தினவுதீர மரத்தில் உராய்ந்தபோது கிளையில் மாட்டியிருந்த அரணிக்கட்டை அதன் கொம்பில் தொற்றிக்கொண்டுவிட்டது. பதறியோடும் அம்மானைப் பற்றி, தனது அரணிக்கட்டையை மீட்டுத்தருமாறு அந்தணன் தருமநந்தனரிடம் முறையிடுகிறான். ஐவரும் வில்லேந்திய கையராய் அம்மானைத்

துரத்திச் செல்கின்றனர். மாரீசன் மானுருவில் இராம பிரானை இழுத்துச் சென்றதுபோன்று, இம்மானும் பாண்ட வர்கள் ஐவர் கைக்கும் அகப்படாது வெகு தொலைவு வந்து விட்டது. களைத்த ஐவரும் நீர்விடாய் மிக்கவராய் ஆலமரத் தடியில் அமர்ந்துவிட்டனர். துயரமேலீட்டால் நான்கு தம்பிகளும் தருமரைப் பலவாறு இடித்துரைக்கின்றனர். "விடாயைப்போக்க நீர் கொணர்வீராக" என்று தருமர் கூறியதும், நகுலன் ஆலமரத்தின் மீதேறித் தொலைவிலுள்ள தொரு பொய்கையைக் காண்கிறான். தருமரது ஏவலால் தண்ணீர் கொண்டுவரச் சென்ற நகுலன் குளத்தினருகே சென்று தண்ணீர் பருகமுற்பட்டபோது "நில்; இக்குளம் எனக்குச் சொந்தம்; விரும்பினால் என் வினாக்களுக்கு விடை யளித்துவிட்டுத் தண்ணீரைக் குடி; எடுத்தும் செல்" என்று ஆகாயவாணி கூறியது. தாகமிகுதியினால் அதனை அலட்சியம் செய்து நகுலன் தண்ணீர் பருகவே மயங்கி வீழ்ந்தான். இவ்வாறே சகதேவன், அருச்சுனன், பீமன் ஆகிய மூவரும் ஒருவர் பின்னொருவராக வந்து அசரீரியின் வார்த்தையைக் கேளாது நீர் பருகி மயங்கி வீழ்ந்தனர்.

பின் தருமநந்தனர் தம்பியரைக் காணாது துயருற்று கால் தடத்தை அடையாளமாகக் கொண்டு குளக்கரைக்கு வந்தார். தம்பிகளின் நிலைகண்டு வருந்தி, குளத்திலிறங்க முற்பட ஆகாயத்திலிருந்து வரும் சொல்லைக் கேட்டார். "நான் பாசியையும் மீன்களையும் தின்னும் கொக்காவேன்; என்னால் தான் உன் தம்பிமார் வீழ்த்தப்பட்டனர். அரச குமர! நான் கேட்கும் வினாக்களுக்கு விடை கூறியபின்னர் நீர் பருகுவாயாக; இல்லையேல் ஐந்தாமவனாக நீயும் யம னுலகு செல்வாய்" என்றது. அதுகேட்ட தருமநந்தனர் "கொக்கே! நீ சாதாரணப் பறவையாயிருக்கமுடியாது; அனைத்துலகும் எதிர்த்துவந்தாலும் வெல்லும் ஆற்றல் பெற்ற என் தம்பியரை வீழ்த்திய நீ யார்?" என வினவினார். உடனே அக்கொக்கு, பயங்கரமான கண்

களும், பருத்த தேகமும், பனைமா அளவு ஓங்கிய உருவமு முடைய யக்ஷனைக் காட்சி அளித்தது "தருமநந்தன! நீ ஸாஹஸம் செய்யாதே; நான் யக்ஷனேவேன்; நீ என் வினைக்களுக்கு விடை கூறுவாயாக. இக்குளம் எனக்குச் சொந்தமானது" என்று கூறியது. அதுகேட்ட தருமர், தம்பியரைப் பிரிந்த வருத்தமுடையவராயிருந்தாலும், சிறிதும் அஞ்சாதவராய், "யக்ஷ! வீண் தற்புகழ்ச்சி செய்து கொள்ளாதே; தாராளமாக வினவுவாயாக; என் அறிவுக் குத்தக்கவாறு விடை கூறுகிறேன்" என்றார்.

1 यक्षः — किंस्विदादित्यमुन्नयति?

யக்ஷன் — எவன் சூரியனை உதிக்கச் செய்கிறன்?

युधिष्ठिरः — ब्रह्मादित्यमुन्नयति।

யுதிட்டிரன்—பிரம்மம் ஆதித்தியனை (சூரியனை) உதிக்கச் செய்கிறது.

இவ்வினாவிடைகள் ஆத்மதத்துவத்தை நிச்சயிக்கின்றன. "ஆத்மாவை அறிந்தவன் துக்கத்தைத் தாண்டுகிறன்" என்று வேதம் கூறுகின்றபடியால் ஆத்மக்ஞானமே பயனுள்ளதாகும். அந்த ஆத்மஞானம் ஸித்திப்பதற்குப் பின்வரும் வினாவிடைகள் மூலம் பலவிதமான ஸாதனங்கள் நிரூபிக்கப்படுகின்றன.

இவ்விடத்து "ப்ரம்மம்" என்பது வேதமாகும். "ஆதித்யன்" என்பது ஜீவனைக் குறிக்கிறது. சப்தம் முதலியவைகளைக் காது முதலியவைகளால் (आदत्ते) அறிகிறன் ஆதலால் ஜீவன் ஆதித்யன் என்று சொல்லப் படுகிறன். "நான் குட்டையாயிருக்கிறேன் சிவப்பாய் இருக்கிறேன்." என்று கூறுமவற்றல் அந்த ஜீவன் தேஹம் முதலியவைகளாகவே விளங்கிக்கொண்டும், மதவாதிகளால் பலவிதமாக வேறுபடுத்திக் கூறப்பட்டும் இருக்கிறன்,

அந்த ஜீவனை வேதமானது சரீரம் முதலியவற்றைக் காட்டிலும் வேறானவன் என்று காட்டுகிறது. "வேதத்தை அறியாதவன் ஆத்மாவை அறியான்" என்று வேதமே கூறுவதால் வேதமே ஆத்மாவை அறிவதில் பிரமாணம் என்பதாகும்.

வேதத்தால் மட்டுமே ஆத்மாவை அறிகிறார்களா வேறு ஏதும் தேவையா என்பது அடுத்த வினாவிடை மூலம் விளக்கப்படுகிறது.

2 य — के च तस्याभितश्चराः ?

ய — எவர்கள் அவனுக்கு இருபக்கங்களிலும் ஸஞ்சரிக்கிறார்கள் ?

यु — देवाः तस्य अभितः चराः ।

யு — தேவர்கள் அவனுக்கு இரு புறத்திலும் சுற்றி வருகிறார்கள்.

வேதத்தால் எல்லாருமே ஆத்மாவை அறிகிறார்களில்லை. இங்கு "தேவா:" என்பது சமம், தமம் முதலிய குணங்களைக் குறிக்கின்றது. ஆத்மாவை அறிபவனுக்கு சமதமாதி குணங்கள் உதவி செய்கின்றன என்பது கருத்து.

3 य — कश्च एनमस्तं नयति ?

ய — எவன் அவனை அஸ்தமனத்தை அடையச் செய்கிறான் ?

यु — धर्मश्चास्तं नयति ।

யு — தருமம் அவனை அஸ்தமனத்தை அடைவிக்கிறது?

அஸ்தம்" என்ற சொல்லுக்குத் தன்னிருப்பிடம் பாருள். அதாவது अपहतपाप्मत्वं (பாபமில்லாமை), மூப்பில்லாமை), विशोकत्वं (துயரமின்மை),

**विमृत्युत्वं** (மரணமின்மை), **अविजिघत्सत्वं** (பசியில்லாமை), **अपिपासत्वं** (தாகமின்மை), **सत्यकामत्वं** (விரும்பியது நிறைவேறுதல்), **सत्यसङ्कल्पत्वं** (நினைத்தது கைகூடுதல்) ஆகிய எட்டுக் குணங்களுள்ளதும் அதற்குக் காரணமுமான ஹ்ருதயாகாசம் ப்ரத்யகாத்மா. அந்த இடத்துக்குக் கர்மரூபமும், உபாஸனரூபமுமான தர்மமானது தான் நேரிலோ பரம்பரையாகவோ இந்த ஜீவனைக் கொண்டுபோகிறது.

4 य — कस्मिंश्च प्रतितिष्ठति ?

ய — எதில் அவன் நிலைபெற்றிருக்கிறான் ?

यु — सत्ये च प्रतितिष्ठति ।

யு — அவன் ஸத்யத்தில் நிலைபெற்றவனாகிறான்.

அந்த ஜீவன் மேலே சொல்லப்பட்டபடி ஸ்வரூபமான ஸகுணப்ரம்மத் தன்மையை அடைந்து அதன் நிவ்ருத்தியினால் எல்லாவற்றின் நிவ்ருத்திக்குமிடமான சுத்த சித்ரூபமான ஸத்யத்தில் நிலைபெற்றவனாகிறான்.

மேலே சொன்ன நான்கினாலும் நாமறிவது:—ஒரு ஜீவனானவன் வேதசாஸ்திரப் பயிற்சியால் அறிவுண்டாகப் பெற்று அதனால் சமதமாதி குணங்கள் நிறைந்தவனாய், தேஹாதிகளில் ஆத்மா என்று தோன்றுகிற விபரீத க்ஞானம் நீங்கப்பெற்றவனாய், பிறகு ஸ்வர்க்கம் என்று சொல்லப்படுகிற ஸகுணப்ரம்ம தர்சனம் உண்டாகப் பெறுகிறான். பிறகு கேவலீபாவம் ஏற்படுகிறது.

5 य — केनस्वित् श्रोत्रियो भवति ?

ய — எதனால் மனிதன் ச்ரோத்ரியனாகிறான் ?

यु — श्रुतेन श्रोत्रियो भवति ।

யு — வேதமோதுவதனால் சுரோத்ரியனாகிறான்.

முந்தைய வினு விடைகளில் ஜீவன் சுத்தசித்தில் நிலை பெறுவதற்கு வேதம் காரணமென்பது சொல்லப்பட்டது. அதுவிஷயத்தில் ப்ரத்யக்ஷமான காரணம் கூறப்படுகிறது. ச்ரோத்ரிய: = வேதமோதினவன். "ச்ருதேந" என்றத னுல் ஆசார்யன் வாயிலாக வேதத்தின் அர்த்தங்களை நன்கு அறிந்துகொள்பவன் தான் ச்ரோத்ரியனுகிருன். அக்ஷரங் களை மட்டும் அறிவதனுல் ச்ரோத்ரியன் (பிராமணன்) ஆகி விடமாட்டான் என்பது பெறப்படுகிறது.

"श्रोत्रियश्छन्दोऽधीते" என்கிருர் பாணினியும்.

6 य — केनस्वित् विन्दते महत्?

ய — எதனுல் மஹத்தை அடைகிருன் ?

यु — तपसा विन्दते महत् ।

யு — தவத்தினுல் மஹத்தை அடைகிருன்.

யுக்தியினுல், அதாவது ஆசார்யன் வாயிலாகக் கேட்ட வேதத்தின் பொருளை நன்கு மனனம் செய்வதால் பிரம்மத்தை அறிகிருன். மஹத் – பிரம்மம். பிரமாணத் திலும், பிரமேயத்திலும் சந்தேகங்கள் நீங்கி ப்ரம்மத்தை நிச்சயிக்கிருன்.

7 य — केनस्वित् द्वितीयवान् भवति ?

ய — எதனுல் மனிதன் துணையுள்ளவனுகிருன் ?

यु — धृत्या द्वितीयवान् भवति ।

யு — தைர்யத்தினுல் துணையுள்ளவனுகிருன்.

"த்ருதி = நிதித்யாஸனம்." "धृत्या यया धारयते" என்று கீதையில் சொல்லப்பட்ட ஸாத்விக த்ருதியான நிதித்யாஸ னத்தினுல் என்பதாகும்.

அவித்யையினலுண்டானதும், முன்னிருந்ததுமான ஜீவ ஸ்வரூபத்தைக் காட்டிலும் வேறானதும், வித்யையினல் அடையத்தக்கதும் ஆகிய ப்ரம்மஸ்வரூபத்தை நிதித்யாஸனத்தினல் அடைகிறன் என்பது கருத்து.

8 य — केन बुद्धिमान् भवति ?

ய — எதனல் புத்திமானகிறன் ?

यु — वृद्धसेवया बुद्धिमान् भवति ।

யு — பெரியோர்களை அடுத்தலால் புத்திமானகிறன்.

ச்ரவணம், மநநம், நிதித்யாஸனம் (காதால் கேட்டல், மனத்தில் சிந்தித்தல், மனத்தில் நிலைநிறுத்தல்) ஆகிய மூன்றையும் நிச்சயிப்பதான புத்தியானது குருவின் உபதேசத்தினலேயே கிடைக்கத் தக்கதாகும்.

ஆக வேதவாக்கியங்களும், ச்ரவணம் முதலிய மூன்றும் ஆசார்யனை உடையவனயிருத்தலும் ஆத்மதர்சனத்துக்கு ஸாதனங்களாகும் என்பது பெறப்படுகிறது.

இவற்றல் "आत्मा वाऽरे द्रष्टव्यः श्रोतव्यो मन्तव्यो निदिध्यासितव्यः" என்கிற உபநிஷத்தின் பொருள் விளக்கப்படுகிறது.

இனி வரும் வின விடைகள் மூலம் ச்ரவணம் முதலியவற்றின் அதிகாரத்துக்குக் காரணத்தைச் சொல்லுகிறர்.

9 य — किं ब्राह्मणानां देवत्वम् ?

ய — பிராமணர்களுக்கு தேவத்தன்மை எது ?

यु — स्वाध्याय एषां देवत्वम् ।

யு — பிராமணர்களுக்கு ஸ்வர்க்கலோகத்தை அடைவிப்பது வேதாத்யயனமே ஆகும். ஆக அவர்களுக்கு தேவத்தன்மையை அடைவிப்பது வேதமோதுதலே,

10 य — कश्च धर्मः सतामिव ?

ய — ஸாதுக்களுக்கிருப்பதுபோல அவர்களுக்கு தர்மம் எது ?

यु — तपः एषां सतामिव ।

யு — ஸாதுக்களுக்குப்போல இவர்களுக்குத் தவம் தான் தர்மமாகும். தவமாவது சமம், தமம் முதலிய குணங்களாகும். அவை ஸாதுக்களின் ஆசாரம் ஆக இக்குணங்களும் வேதாத்யயனமும் கொள்ளத் தக்கவை." "**स्वाध्यायप्रवचने एवेति नाको मौद्गल्यः । तद्धि तपस्तद्धि तपः॥**" என்று தைத்திரீயோபநிஷத்தும் இக்கருத்தையே கூறுகிறது.

11 य — कश्च एषां मानुषो भावः ?

ய — அவர்களுக்கு மானிடத்தன்மை எது ?

यु — मरणं मानुषो भावः ।

யு — மரணம் இவர்களுக்கு மனிதத் தன்மையாகும்.

தேஹம் முதலியவற்றில் "நான்" "எனது" என்ற செருக்குக் கொள்வதுதான் மரணமாகும். அவ்வபிமானம் தான் பிறப்பு, இறப்புக்களைக் கொடுக்கிறது.

12 य — किमेषामसतामिव ?

ய — அஸத்துக்களுக்குப்போல அவர்களுக்கு அதர்மம் எது ?

यु — परिवादः असतामिव ।

யு — பரநிந்தை அவர்களுக்கு அதர்மமாகும்.

அதாவது தெய்வங்கள், அந்தணர்கள் முதலியவர்களை நிந்திப்பது. இது அஸாதுக்களின் ஆசாரமாகும். ஆக,

"நான்" என்ற அகந்தையும், பிறரை நிந்திப்பதும் விடத் தக்கவைகளாகும் என்பது பெறப்பட்டது.

13 य — किं क्षत्रियाणां देवत्वम् ?

ய — க்ஷத்திரியர்களுக்கு தேவத்தன்மை எது ?

यु — इष्वस्त्रमेषां देवत्वम् ।

யு — அம்பு, வில் முதலிய ஆயுதங்கள் தான் அவர்களுக்கு தெய்வத்தன்மை படைத்தன ஆகும். ஆக அரசமரபினருக்கு ஆயுதங்களே தெய்வங்களாகும். அதனுல் தான் அருச்சுனன், தன் வில்லாகிய காண்டீவத்தையே தெய்வமாகப் போற்றிவந்தான். அக்காண்டீவத்தை நிந்திப்பவர் எவராயினும் அவர் தலையைத் துணித்துவிடுவது என்று சபதமும் செய்திருந்தான்.

14 य — कश्च धर्मः सतामिव ?

ய — ஸாதுக்களுக்குப் போல இவர்களுக்கு தர்மம் எது ?

यु — यज्ञ एषां सतामिव ।

யு — யாகந்தான் க்ஷத்திரியர்களுக்கு தர்மமாகும்.

இராஜஸூயம், அசுவமேதம் முதலிய யாகங்களைத் தவிர போரில் சண்டையிடுவதும் இவர்களுக்கு வேள்வியேயாகும். போர்க்களத்தில் எதிரிகளோடு கடுமையாகப் பொருது அவர்களைக் கொன்று களம் குவிப்பதால் இது களவேள்வி என்றே அழைக்கப்பெறும்.

15 य — कश्चैषां मानुषो भावः ?

ய — க்ஷத்திரியர்களுக்கு மானிடத்தன்மை எது ?

यु — भयं वै मानुषो भावः ।

யு — பயமானது மானிடத்தன்மையாகும்.

அரசமரபினர் போர்க்களத்தில் வெற்றி அல்லது வீர மரணம் என்ற இரண்டையே குறிக்கோளாகக் கொள்ள வேண்டுமல்லாது போரில் அஞ்சுதல் அவர்கட்கிழிவான தன்றோ.

16 य — किमेषामसतामिव ?

ய — அஸத்துக்களுக்குப் போல அரசமரபினருக்கு அதர்மம் எது ?

यु — परित्यागोऽसतामिव ।

யு — துயருற்றுத் தன்னை வந்தடைந்தவர்களைக் காப்பாற்றாமல் கைவிடுதல் அதர்மமாகும்.

17 य — किमेकं यज्ञियं साम ?

ய — யாகத்துக்குரிய முக்கியமான ஸாமம் எது ?

यु — प्राणो वै यज्ञियं साम ।

யு — உயிர் தான் யாகத்திற்குரிய முக்கிய ஸாமம்.

18 य — किमेकं यज्ञियं यजुः ?

ய — யாகத்திற்குரிய முக்கியமான யஜுஸ் எது ?

यु — मनो वै यज्ञियं यजुः ।

யு — மனம் தான் யஜுஸ் ஆகும்.

யாகங்களில் தேவதைகளை ஸாமவேதத்தால் அழைத்து, யஜுர்வேதத்தால் ஹோமம் பண்ணி, ரிக்வேதத்தால் தோத்திரம் பண்ணுவது வழக்கம். இவ்வாறு யாகங்களில் ஸாமமும், யஜுஸும் உதவி செய்வதுபோல ஞானயக்ஞத்

துக்கு பிராணனும், மனமும் அடக்கப்பட்டால் உபகாரம் செய்பவை ஆகின்றன.

19 य — का चैषां वृणुते यज्ञम् ?

ய — யாகத்தை எது வரிக்கிறது ?

यु — ऋगेका वृणुते यज्ञम् ।

யு — ரிக்கு ஒன்றே யக்ஞத்தை வரிக்கிறது.

"ரிக்" என்பது வேதவாக்காகும். யக்ஞமாவது ஆத்மஞானம். வேதமே ஞானத்தை உண்டாக்குகிறது.

மனம், வாக்கு, பிராணன் இந்த மூன்றும் ஆத்மாவின் நன்மைக்காகவே பிரம்மாவினல் படைக்கப்பட்டன ஆகும்:

20 य — कां यज्ञो नातिवर्तते ?

ய — யக்ஞமானது எதனை மீருமலிருக்கிறது ?

यु — तां यज्ञो नातिवर्तते ।

யு — யாகமானது அந்த ரிக்கை மீருமலிருக்கிறது. அதாவது வேதவாக்கைக் கடப்பதில்லை யென்பதாம்.

ஆக ஒரு மனிதன் சமதமாதிகுணங்களையும், பிராண ஜயம் முதலியவற்றையும் செய்யமுடியாமற் போனல் பிரத்யக்ஷமான யாகம் முதலியவைகளையே செய்ய வேண்டும்.

21 य — किं स्विदावपतां श्रेष्ठम् ?

ய — பயிரிடுபவர்களுக்கு எது சிறந்தது ?

यु — वर्षमावपतां श्रेष्ठम् ।

யு — பயிரிடுபவர்களுக்கு மழைதான் சிறந்தது.

"ஆவபதாம்" என்ற சொல் தேவர்களைக் குறித்து யாகம் செய்பவர்களுக்கு என்றும் பொருள்படும். அவ்வாறாயின் தேவர்களைக் குறித்து யாகம் செய்பவர்களுக்கு உரிய பலன் மழையே ஆகும்." "மழையின்றி மாநிலத்தார்க்கில்லை" "மாரியல்லது காரியமில்லை" என்பன முதுமொழிகளன்றோ.

22 य — किंस्वित् निवपतां वरम् ?

ய — விதைப்பவர்களுக்கு ஏது சிறந்தது ?

यु — बीजं निवपतां वरम् ।

யு — விதைப்பவர்களுக்கு விதைதான் சிறந்தது.

"நிவபதாம்" என்பது பித்ருதர்ப்பணம் செய்பவர்களுக்கு என்றும் பொருள்படும். அவ்வாறானால் "பீஜம்" — புத்திரர்கள் சிறந்தவர் என்று பொருள்கொள்ளவேண்டியது. பீஜம்-நிலம், தோட்டம் முதலியனவுமாகும்.

23 य — किंस्वित् प्रतिष्ठमानानां वरम् ?

ய — இவ்வுலகில் நிலைத்த இன்பவாழ்வடைய விரும்புபவர்களுக்கு எது சிறந்தது ?

यु — गावः प्रतिष्ठमानानां वरम् ।

யு — பசுக்களே சிறந்தவை.

"**विद्यते गोषु संपन्नम्**" என்கிறது ஸ்ரீமத்ராமாயணம். ஆக நாட்டின் உயிர்த் தொழிலாகிய பயிர்த் தொழிலுக்கு தெய்வானுக்ரஹத்தால் நல்ல மழையும், நிலம் தோட்டம் முதலியனவும், அவற்றில் விதைப்பதற்குச் சிறந்த விதைகளும், பசு முதலிய கால்நடைச் செல்வங்களும் இன்றியமையாதவை என்பது கூறப்பட்டது.

24 य — किंस्वित् प्रसवतां वरम् ?

ய — ஸந்ததியை விரும்புகிறவர்களுக்கு எது சிறந்தது

यु — पुत्रः प्रसवतां वरम् ।

யு — புத்திரனே சிறந்தவன்.

தனது சொந்தப் பிள்ளையே ஸந்ததி ஆவனேயொழிய மகள் மகனோ, ஸ்வீகாரம் பண்ணிக்கொண்ட மகனோ அவ்வளவு சிறப்புடையவனல்ல என்பது பெறப்பட்டது. இதுபற்றியே திருவள்ளுவரும்,

"பெறுமவற்றுள் யாமறி வதில்லை அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற" — என்றார் திருவள்ளுவர்.

"**प्रजया हि मनुष्यः पूर्णः**" என்கிறது வேதம்.

25 य — इन्द्रियार्थाननुभवन् बुद्धिमान् लोकपूजितः ।
संमतः सर्वभूतानाम् उच्छ्वसन् को न जीवति ॥

ய — சுவை, ஒளி முதலியவற்றை நாக்கு, கண் முதலிய இந்திரியங்களால் அனுபவிக்கிறவனும், சிறந்த புத்தியுள்ளவனும், உலகத்தாரால் மிக்க செல்வமுள்ளவன் என்று பூஜிக்கப்படுபவனுயும், எல்லா உயிர்களாலும் விரும்பப்படுபவனுயும் உள்ள போதிலும் எந்த மனிதன் மூச்சுவிட்டுக்கொண்டு இருந்தும் உயிரில்லாதவனாகிறான் ?

यु — देवतातिथिभृत्यानां पितॄणामात्मनश्च यः ।
न निर्वपति पञ्चानामुच्छ्वसन् न स जीवति ॥

யு — எவன் தேவதைகள், விருந்தினர்கள், வேலைக்காரர்கள், பித்ருக்கள், தான்—இந்த ஐந்து வகையினருக்கும் அன்னம் முதலியவற்றை வழங்காமல் உள்ளானோ அவன் மூச்சுவிட்டுக்கொண்டிருந்தாலும் உயிரில்லாதவனே ஆவான். இந்த ஐவகையினரையும் உபசரிப்பதுதான் "பஞ்சமஹாயக்ஞம்"

என்று போற்றப் பெறுகிறது. இல்வாழ்க்கையின் பயனே இதுதான் என்று திருவள்ளுவரும் குறிப்பிடுகிறார்.

"தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்
ஐம்புலத்தா றோம்பல் தலை"— திருக்குறள்

26 य — किंस्वित् गुरुतरं भूमेः ?

ய — பூமியைக் காட்டிலும் கனமானது எது ?

यु — माता गुरुतरा भूमेः ।

யு —பூமியினும் கனமானவள் தாயே.

தன்னைத் தோண்டுமவர்களையும் பொறுமையின் காரணமாக பூமி தாங்கிச் சுமந்துநிற்கிறது. அத்தகைய பூமியினும் பொறுமைமிக்கவள் தாயே என்பது கருத்து. '**पृथिवी माता**" என்கிறது வேதம்.

27 य — किंस्विदुच्चतरं खात् ?

ய — ஆகாயத்தைக் காட்டிலும் உயர்ந்தது எது ?

यु — खात् पिता उच्चतरस्तथा ।

யு — ஆகாயத்தினும் உயர்ந்தவர் தந்தையே ஆவார். "**द्यौः पिता**" என்கிறது வேதம்.

28 य — किंस्वित् शीघ्रतरं वायोः ?

ய — காற்றைக் காட்டிலும் விரைவானது எது ?

यु — मनः शीघ्रतरं वातात् ।

யு — காற்றினும் கடிதோடிச் செல்வது மனமேயாகும். வாயுவேகத்தினும் மனோவேகம் சிறந்ததன்றோ.

29 य — किंस्वित् बहुतरं तृणात् ?

ய — புல்லைக்காட்டிலும் அதிகமானது எது ?

यु — चिन्ता बहुतरी तृणात् ।

யு — புல்லினும் அதிகமானது கவலையே ஆகும்.

எளியபுல்லாயிருந்தாலும் ஒரு குறிப்பிட்ட இடத்தில் இவ்வளவு தான் புல்லை அடைக்கமுடியும் என்ற வரையறை உண்டு. ஆனால் மிகச்சிறிய மனத்தினுள் எத்துணை மிகப் பெருங் கவலைகள் செறிந்துள்ளன ஆதலால் புல்லினும் அதிகமாகிவிட்டது கவலை.

முந்தைய வினா விடைகளிற் கூறியபடி ஒரு மனிதன் நல்வாழ்விற்குரிய ஸாதனங்களைக் கடைப்பிடிப்பதற்கு சக்தியற்றவனாக இருப்பானேயானால், பெற்ற தாய் தந்தையர்க்குப் பணிவிடை செய்தும், மனத்தை அடக்கியும், (அதாவது பேராசையின்றி கிடைத்ததைக் கொண்டு மகிழ்ந்தும்) புல்லினும் இழிவான கவலைகளை யொழித்தும் வாழக்கடவன் என்பது இதனால் பெறப்படுகிறது.

30 य — किंस्वित् सुप्तं न निमिषति ?

ய — எது தூங்கும்போதும் கண்களை மூடாமலிருக்கிறது?

यु — मत्स्यः सुप्तो न निमिषति ।

யு — மீன்தான் தூங்கும்போதும் கண்களை மூடாமல் இருக்கிறது.

முற்கூறியபடி மனத்தை அடக்கிவிட்டால் சூன்யமே அல்லவா மிஞ்சும் என்று ஸந்தேகித்து அப்படி அன்று என்று இதன்மூலம் தெரிவிக்கிறார்.

ஜாக்ரத், ஸ்வப்னம் (விழிப்பு, உறக்கம்) என்ற இரண்டு கரை நடுவிலோ, இம்மை மறுமை என்ற இரு கரை நடுவிலோ அலைவதனால் ஜீவாத்மாவே இங்கு மீன் என்று குறிக்கப்படுகிறது. தேஹம் தான் இம்மை மறுமைகளிலும்; விழிப்பு உறக்க நிலைகளிலும் மாறுபடுகிறதேயொழிய ஜீவன்

ஒரே விழிப்பு நிலையில் உள்ளது என்பது இதனால் பெறப் படுகிறது.

ஜீவனானது தான் அடையவேண்டிய இடமான ஸத் ரூபமான ப்ரம்மத்தை அடைந்தபோது ஆத்மா, மனத்தைப் போல அறிவற்றவனாவதில்லை. காரணம், அறிகிறவன் நித்யனானதால் அறிவுக்கு அழிவில்லை.

31 य — किंस्वित् जातं न चेङ्गते ?

ய — எது பிறந்தும் அசைவற்றிருக்கிறது ?

यु — अण्डं जातं न चेङ्गते ।

யு — முட்டை பிறந்தும் அசைகிறதில்லை.

ஜீவன் அழிவற்றவனாயிற்றே; அவனுக்குத் தான் பிறப்புக் கிடையாதே; பின் பிறக்கிறவன் யார் என ஸந்தேஹித்து விடை கூறுகிறார் இதன்மூலம். இவ்விடத்து முட்டை என்பது பிண்டவடிவமான ப்ரம்மாண்டமாகும். அது பிறந்தும் அசைகிறதில்லை. அதாவது புருஷனால் ப்ரவர்த்திக்கும்படி செய்யப்பட்டே, அகங்காரம் முதலிய ஜடவஸ்துக்களின் ஸமூகம் இயங்குகிறது (செயலாற்று கிறது) என்பது கருத்து.

"तस्मादिदं सर्वं शिथिलमिवाध्रुवमिवाभवत् । प्रजापतिर्वाव तत् । आत्मना आत्मानं विधाय तदेवानुप्राविशत् ॥ என்கிறது வேதம்.

32 य — कस्यस्विद् हृदयं नास्ति ?

ய — எதுக்கு ஹ்ருதயமில்லை ?

यु — अश्मनो हृदयं नास्ति ।

யு — கல்லுக்கு இதயமில்லை.

முந்தைய விடையிற் கூறியபடி பிறந்ததும் பிறவாதது மாகிய இவ்விரண்டின் சேர்க்கை துக்கத்தைத் தருவ

தன்றோ? அத்துயரம் நீங்குவதற்குரிய வழியை இதில் கூறுகிறார். இங்கு சல் என்பது சரீரமற்றவனைக் குறிக்கிறது. அதாவது ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்கிற மூன்று சரீரங்களிலும் விபரீதஞானம் அற்ற யோகிக்கு துயரத்துக் கிருப்பிடமான இதயமில்லை என்பதாம்.

33 य — किंस्वित् वेगेन वर्धते ?

ய — எது வேகத்தால் வ்ருத்தியடைகிறது?

यु — नदी वेगेन वर्धते ।

யு — நதீ வேகத்தினால் வளர்கிறது.

மேற்கூறப்பட்ட யோகிகள் ஸமாதியினின்று எப்படி எழுந்திருப்பார்கள் என்பது இனி கூறப்படுகிறது. இங்கு நதி என்பது மனதைக் குறிக்கிறது. அது வேகத்தினால் வளர்கிறது. அதாவது ஸுஷுப்தியில் (உறக்கத்தில்) இருப்பவனுக்கு ஸ்வப்நம் (கனவு) தோன்றுவதுபோல ஸமாதியிலிருந்து எழுந்திருக்கும் யோகிக்கு இந்த உலகம், பார்க்குங்காலத்தில் மட்டும் உண்டாகிறது.

34 य — किंस्वित् प्रवसतो मित्रम् ?

ய — தேசாந்தரம் போகிறவனுக்கு யார் தோழன்?

यु — विद्या प्रवसतो मित्रम् । ( सार्थः என்று ஒரு பாடம் உண்டு)

யு — வேற்று நாட்டிற்குச் செல்லுமவனுக்கு உற்ற தோழன் அவன் கற்ற கல்வியேயாகும். (ஸார்த்த: என்ற பாடத்தில் வழிப்போக்கர்களின் கூட்டம் உற்ற துணை என்பது பொருளாகும்)

"கல்வியினூங்கில்லை சிற்றுயிர்க் குற்றதுணை"

"யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு"

என்பன ஆன்றோர் வாக்குகளாகும்,

35 य — किंस्वित् मित्रं गृहे सतः ?

ய — வீட்டிலிருப்பவனுக்கு யார் துணை ?

यु — भार्या मित्रं गृहे सतः ।

யு — வீட்டிலுள்ளவனுக்குற்ற துணை மனைவியே ஆவாள். இதுபற்றியே தமிழன் மனைவியை "வாழ்க்கைத் துணைவி" என்றே கூறுகிறான். "பாழே மடக்கொடியில்லாமனை" என்பது ஆன்றோர் வாக்கு. "A wife is half the man his truest friend" என்பது ஆங்கில முதுமொழி.

36 य — आतुरस्य च किं मित्रम् ?

ய — நோயாளிக்கு நண்பன் யார் ?

यु — आतुरस्य भिषक् मित्रम् ।

யு — நோயாளிக்கு நண்பன் வைத்தியனேயாவான்.

37 य — किंस्वित् मित्रं मरिष्यतः ?

ய — சாகப்போகிறவனுக்கு நண்பன் யார் ?

यु — दानं मित्रं मरिष्यतः ।

யு—இறக்கப்போகிறவனுக்கு தானமே சிறந்த நண்பன் யாத்திரை செய்பவர்களுக்கு வழிப்போக்கர் துணையாவதுபோல இறப்பவனுக்கு தானம் துணையாகும். மனத்தை அடக்க சக்தியில்லாதவர்களுக்கு தானமே சிறந்ததாகும். காரணம், தானம் சித்த சுத்தியின் வழியாக யாகம் முதலியவற்றில் ஈடுபடச் செய்யும். யாகாதிகள் சித்தத்தை ஒருவழிப்படுத்தி ஸமஷ்டி உபாஸனையில் பிரவிருத்திக்கச் செய்து உபகாரகமாகின்றன.

38 य — कोऽतिथिः सर्वभूतानाम् ?

ய — எல்லாப் பிராணிகளுக்கும் அதிதி யார் ?

यु — अतिथिः सर्वभूतानामग्निः ।

யு — எல்லாப் பிராணிகளுக்கும் அக்னியே அதிதியாகும் கார்ஹபத்யம், ஆஹவனீயம், தக்ஷிணம் என அக்னி மூன்றாகும்.

39 य — किंस्वित् अमृतम् ?

ய — எது அமிருதமாகும் ?

यु — सोमो गवामृतम् ।

யு — ஸோமம் என்னப்படும் பசுவின்பாலே அம்ருதமாகும்.

40 य — किंस्वित् धर्मं सनातनम् ?

ய — எது சாச்வதமான தர்மம் ?

यु — सनातनोऽमृतो धर्मः ।

யு — மோக்ஷத்திற்குக் காரணமான தர்மமே சாச்வத தர்மமாகும்.

முன்கூறிய ஸோமம் எனப்படும் பசுவின் பாலைக் கொண்டு ஹோமம் செய்வது ஸநாதன தர்மமாகும். அதுவே அம்ருதம். மோக்ஷத்திற்குக் காரணம்.

41 य — किंस्वित् सर्वमिदं जगत् ?

ய — இந்த உலகமனைத்தும் எப்படி இருக்கிறது ?

यु — वायुः सर्वमिदं जगत् ।

யு — இவ்வுலகமனைத்தும் வாயுவாகவேயிருக்கிறது.

மேற்கூறிய மோக்ஷ விஷயத்தில் வழியைக் கூறுகிறார். இந்த உருண்டையான ப்ரம்மாண்டத்தை உருவமாகக் கொண்ட வாயுவின் ஸ்வரூபத்தை அடைவதே மோக்ஷத்திற்கு வழியாகும். "किं तद्विष्णोः बलमाहुः । वातात् विष्णोर्बलमाहुः ।" என்கிறது வேதம்.

மேற்சொன்ன வாயுவுக்கும் அழிவு நேரும் காலத்தில் எது மிஞ்சுகிறது என்பதைச் சொல்லுகிறார் இனி.

42 य — किंस्विदेको विचरते ?

ய — எவன் ஒருவனாக ஸஞ்சரிக்கிறான் ?

यु — सूर्यः एको विचरते ।

யு — பிறிதொன்றன் உதவியின்றித் தானே பிரகாசிக்கும் சூரியனே ஒருவனாக ஸஞ்சரிக்கிறான். இங்கு சூரியன் என்பது ஆத்மாவைக் குறிக்கிறது. விளக்கக்கூடிய பொருள்கள் இருந்தாலும் இல்லாவிட்டாலும் சூரியன் பிரகாசிப்பதுபோல் ஜாக்ரத், ஸ்வப்நம், ஸுஷுப்தி ஆகிய மூன்று அவஸ்தைகளும் இருந்தாலும் இல்லாவிட்டாலும் சித்தத்தை பிரகாசிக்கச் செய்கிற ஆத்மா பிரகாசிக்கிறான்.

43 य — जातः को जायते पुनः ?

ய — பிறந்தவன் எவன் மறுபடியும் பிறக்கிறான் ?

यु — चन्द्रमा जायते पुनः ।

யு — சந்திரன் தான் பிறந்தவன் மீண்டும் பிறக்கிறான்.

இவ்வுலகம் எதனால் விளங்குகிறது என்பதனை இவ் விடையின் மூலம் கூறுகிறார், சந்திரன் என்பது மனம். மனம் அவித்தையினாலுண்டாகி சுகதுக்கங்களைக் கொடுக்கும் உலகத்தைக் கல்பிக்கிறது. மனத்தின் ஸங்கல்பத்தினால் அறியப்படுகிறது.

44 य — किंस्वित् हिमस्य भैषज्यम ?

ய — பனிக்கு எது மருந்து ?

यु — अग्निः हिमस्य भैषज्यम् ।

யு — அக்கினி தான் பனிக்கு மருந்தாகும்.

மேற்சொன்ன அவித்யையைப் போக்குவதற்கு உபாயம் கூறுகிறார். "அக்கினி" என்பது வேதவாக்காகும். "तत्त्वमसि" முதலிய வாக்கே ஸூர்யனை மறைக்கும் அவித்யாஜாட்யத்தைப் போக்கும் மருந்தாகும்.

45 य — किंस्विदावपनं महत् ?

ய — எது எல்லாவற்றையும் அடக்கக்கூடிய பெரிய பாத்திரமாகும் ?

यु — भूमिरावपनं महत् ।

யு — எல்லாவற்றையும் அடக்கும் பெரிய பாத்திரம் பூமி.

இங்கு பூமி என்பது சரீரமாகும். அதுவே வித்யை, அவித்யை இரண்டையும் வைக்கும் பெரிய பாத்திரம். இவ்வுலகிலேயே பிறப்பு, இறப்புக்களில் கட்டுப்படுவதாகிய பத்த बद्ध) நிலையைக் காண்பதுபோல அவற்றில் கட்டுப் படாத முக்தநிலையையும் காண இடமாவது சரீரமேயாகும்.

46 य — किंस्विदेकपदं धर्म्यम ?

ய — தர்மம் எதில் முக்கியமாக நிலைபெறுகிறது ?

यु — दाक्ष्यमेकपदं धर्म्यम् ।

யு — தாக்ஷ்யத்தில்தான் தர்மம் நிலைத்துநிற்கிறது.

தாக்ஷ்யமாவது ஸாமர்த்யம் (முயற்சி) ஸாமர்த்தியத்தில் தான் எல்லாத் தருமங்களும் முடிவு பெறுகின்றன.

47 य — किंस्विदेकपदं यशः ?

ய — புகழ் எதில் முக்கியமாக நிலைபெறுகிறது ?

यु — दानमेकपदं यशः ।

யு — தானத்தில் தான் புகழ் நிலைத்து நிற்கிறது.

"ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியமில்லை உயிர்க்கு"—என்கிறது தமிழ்மறை.

48 य — किंस्विदेकपदं स्वर्ग्यम् ?

ய — சுவர்க்கம் எதில் முக்கியமாக நிலைபெறுகிறது ?

यु — सत्यमेकपदं स्वर्ग्यम् ।

யு — ஸத்யத்தில்தான் ஸ்வர்கம் நிலைத்து நிற்கிறது.

"सत्यं परं परँ सत्यँ सत्येन न सुवर्गाल्लोकाच्च्यवन्ते कदाचन सताँ हि सत्यं तस्मात् सत्ये रमन्ते"। என்கிறது தைத்திரீயோபநிஷத்து.

"யாமெய்யாக் கண்டவற்றுளில்லை எனைத்தொன்றும்
வாய்மையி னல்ல பிற" என்கிறது தமிழ்மறை.

49 य — किंस्विदेकपदं सुखम् ?

ய — சுகம் எதில் நிலைத்து நிற்கிறது ?

यु — शीलमेकपदं सुखम् ।

யு — நல்லொழுக்கத்தில்தான் சுகம் நிலைத்து நிற்கிறது

"நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம்
என்றும் இடும்பைதரும்" என்கிறது பொய்யாமொழி
Happiness is the result of good conduct
என்கிறது ஆங்கிலம்.

ஆக ஸாமர்த்தியம், தானம், ஸத்தியம், நல்லொழுக்கம் இவை நான்கும் கட்டாயம் கொள்ளத்தக்கவைகளாகும்.

50 य — किंस्विदात्मा मनुष्यस्य ?

ய — மனிதனுக்கு ஆத்மா எது ?

यु — पुत्र आत्मा मनुष्यस्य ।

யு — புத்திரன் தான் மனிதனின் ஆத்மா.

"**आत्मा वै पुत्रनामासि**" என்கிறது வேதம்.

51 य — किंस्विद्दैवकृतः सखा ?

ய — தெய்வத்தால் ஏற்படுத்தப்பட்ட துணை யார் ?

यु — भार्या दैवकृतः सखा ।

யு — மனைவி தான் தெய்வத்தாலேற்படுத்தப்பட்ட துணையாவாள்.

52 य — उपजीवनं किंस्विदस्य ?

ய — மனிதனது பிழைப்புக்கு ஸாதனம் எது ?

यु — उपजीवनं च पर्जन्यः ।

யு — மழையே எல்லாவற்றிற்கும் ஸாதனமாகும். "துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத் துப்பாய தூஉம் மழை" என்று திருவள்ளுவரும் கூறியுள்ளார்.

53 य — किंस्विदस्य परायणम् ?

ய — மனிதனுக்கு முக்கியமான கதி (முடிவாக அடையுமிடம்) எது ?

यु — दानमस्य परायणम् ।

யு — மனிதனுக்கு முக்கியமான கதி (எல்லாவற்றுக்கும் மேலான பரமபுருஷார்த்தம்) தானமேயாகும்.

"नात्यक्त्वा विन्दते परं" என்பதனால் தானமே மோக்ஷத்துக்குக் காரணமாகும். மகன், மனைவி, மேகம் இந்த மூன்றையும்போல முறையே ஆத்மஞானத்தைக் கொடுப்பதாலும், நல்ல பயனுள்ளதாயிருப்பதாலும், கொடாதது வருவதில்லை என்ற வாக்கியத்தை அனுஸரித்துப் பிழைப்புக்குக் காரணமாயிருத்தலாலும் தானமே சிறந்ததாகும். "दाने सर्वं प्रतिष्ठितं तस्माद्दानं परमं वदन्ति" என்கிறது வேதம்.

54 य — धन्यानामुत्तमं किंस्वित् ?

ய — செல்வத்தைக் கொடுப்பவற்றுள் உத்தமமானது எது ?

यु — धन्यानामुत्तमं दाक्ष्यम् ।

யு—செல்வத்தைக் கொடுப்பதில் சிறந்தது சாமர்த்தியம் (முயற்சியே) ஆகும். இதுபற்றியே வள்ளுவரும்

" ஆக்க மதர்வினாய்ச் செல்லு மசை விலா
வூக்க முடையா னுழை " (திருக்குறள்)

என்றார்.

55 य — धनानां स्यात् किमुत्तमम् ?

ய — பொருள்களுள் எது உத்தமமானது ?

यु — धनानामुत्तमं श्रुतम् ।

யு — சான்றோர் வாய்க்கேட்டுப் பெறும் சாஸ்திர ஞானமே உத்தமமான செல்வமாகும்.

" செல்வத்துட் செல்வம் செவிச்செல்வ மச்செல்வம்
செல்வத்து ளெல்லாம் தலை."

என்றார் பொய்யில் புலவரும்.

56 य — लाभानां उत्तमं किं स्यात् ?

யு — லாபங்களுள் உத்தமமானது எது ?

यु — लाभानां श्रेय आरोग्यम् ।

யு — லாபங்களிற் சிறந்தது நோயின்மையே ஆகும்.

"**शरीरमाद्यं खलु धर्मसाधनं**" என்று ஆரோக்யம் தர்ம ஸாதநமாதலால் சிறந்த லாபமாயிற்று. "நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்" என்கிறது தமிழ்ப் பழமொழி.

57 य — सुखानां स्यात् किमुत्तमम् ?

ய — சுகங்களுள் உத்தமமானது எது ?

यु — सुखानां तुष्टिरुत्तमा ।

யு — சுகங்களுட் சிறந்தது திருப்தி (மன நிறைவு)

"போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து" அல்லவா !

மேற்சொன்ன ஸாமர்த்தியம், சாஸ்திரஞானம், ஆரோக்கியம், திருப்தி ஆகிய நான்கும் ஞானத்துக்கு மிக்க உபகாரமானவை என்பது கண்கூடு.

58 य — कश्च धर्मः परो लोके ?

ய — எது உலகில் சிறந்த தர்மம் ?

यु — आनृशंस्यं परो धर्मः ।

யு —எல்லாப் பிராணிகளுக்கும் அபயம் கொடுப்பதாகிய அஹிம்சையே உலகில் சிறந்த தர்மமாகும். அதுவே ஸங்யாஸம் எனப்படுகிறது." "**आनृशंस्यं परो धर्मः त्वत्त एव मया श्रुतः**" என்று ஸுந்தரகாண்டத்தில் ஸீதை கூறியது உணரத்தக்கது.

59 य — कश्च धर्मः सदाफलः ?

यु — सन्धिः सद्भिः न जीर्यते ।

யு — ஸாதுக்களோடேற்படும் நட்பு எந்நாளும் குறையாது.

மேற்சொன்ன மனத்தை அடக்கும் வழியும் கிருபையுள்ள ஸாதுக்களால் தான் காட்டத்தக்கது. இதுபற்றியே ஆதிசங்கரபகவத்பாதரும் பஜகோவிந்தத்தில்,

सत्सङ्गत्वे निस्सङ्गत्वं निस्सङ्गत्वे निर्मोहत्वम् ।
निर्मोहत्वे निश्चलितत्वं निश्चलितत्वे जीवन्मुक्तिः ॥

என்று அருளியுள்ளார்.

62 य — किं नु हित्वा प्रियो भवति ?

ய — எதை விட்டால் மனிதன் மற்றவர்க்குப் பிரியனாகிறான் ?

यु — मानं हित्वा प्रियो भवति ।

யு — கர்வத்தை (செருக்கை) விட்டவன் எல்லார்க்கும் பிரியனாகிறான்.

63 य — किं नु हित्वा न शोचति ?

ய — எதை விட்டால் மனிதன் துன்புறுவதில்லை ?

यु — क्रोधं हित्वा न शोचति ।

யு — கோபத்தை விட்டவன் என்றும் துயருறுவதில்லை.

64 य — किं नु हित्वाऽर्थवान् भवति ?

ய — எதை விட்டால் மனிதன் பொருளுள்ளவனாகிறான்

यु — कामं हित्वाऽर्थवान् भवति ।

ய — எந்த தர்மம் எப்பொழுதும் பயனுள்ளது?

यु — त्रयीधर्मः सदाफलः ।

யு — மூன்று அக்னிகளால் செய்யப்படும் தர்மமே எப்பொழுதும் பயனுள்ளதாகும்.

இங்கு "த்ரயீ" என்பது மூன்று வேதங்களைக் குறிக்கிறது. அதிலும் அகார, உகார, மகாரங்களாகிய மூன்றெழுத்துக்களை உடைய மோக்ஷமந்திரமாகிய பிரணவத்தையே குறிக்கிறது. எவ்வாறெனின் ரிக், யஜுஸ், ஸாம வேதங்களைச் சுருக்கி भूः, भुवः, सुवः என்ற மூன்றும் தோற்றுவிக்கப்பட்டன என்றும், அதன் சுருக்கம் அகார, உகார, மகாரங்கள் என்றும் அதுவே ஓங்காரமாகிறது என்றும் அதர்வணவேதம் கூறுகிறது. (भूरिति ऋग्वेदादजायत। भुव इति यजुर्वेदात्। सुवरिति सामवेदात्। तानि शुक्राण्यभ्यतपत्। तेभ्योऽभितप्तेभ्यः त्रयो वर्णा अजायन्त। अकार उकारो मकार इति। तानेकधा समभरत् तदेतदोमिति।) அதனால் தான் ஓம் என்பது ஸகல வேதஸாரமாகிய மோக்ஷமந்திரம் என்று போற்றப் பெறுகிறது.

60 य — किं नियम्य न शोचन्ति?

ய — எதை அடக்கினால் மனிதர்கள் துயரமடையார்?

यु — मनो यम्य न शोचन्ति ।

யு — மனத்தை அடக்கினால் மாந்தர் துயருறார்.

மேற்சொன்ன தர்மத்தை அடையும் வழி மனத்தை அடக்குவதேயாகும். அதனால் ஆத்மதத்வத்தை அறிந்தவனாகி ஸம்ஸாரதுக்கத்தைத் தாண்டுகிறான்.

61 य — कैश्च सन्धिर्न जीर्यते?

ய — எவர்களோடேற்படும் நட்பு குறைவடையாது?

यु — सन्धिः सद्भिः न जीर्यते ।

யு — ஸாதுக்களோடேற்படும் நட்பு என்நாளும் குறையாது.

மேற்சொன்ன மனத்தை அடக்கும் வழியும் கிருபையுள்ள ஸாதுக்களால் தான் காட்டத்தக்கது. இதுபற்றியே ஆதிசங்கரபகவத்பாதரும் பஜகோவிந்தத்தில்,

सत्सङ्गत्वे निस्सङ्गत्वं निस्सङ्गत्वे निर्मोहत्वम् ।
निर्मोहत्वे निश्चलितत्वं निश्चलितत्वे जीवन्मुक्तिः ॥

என்று அருளியுள்ளார்.

62 य — किं नु हित्वा प्रियो भवति ?

ய — எதை விட்டால் மனிதன் மற்றவர்க்குப் பிரியனாகிறான் ?

यु — मानं हित्वा प्रियो भवति ।

யு — கர்வத்தை (செருக்கை) விட்டவன் எல்லார்க்கும் பிரியனாகிறான்.

63 य — किं नु हित्वा न शोचति ?

ய — எதை விட்டால் மனிதன் துன்புறுவதில்லை ?

यु — क्रोधं हित्वा न शोचति ।

யு — கோபத்தை விட்டவன் என்றும் துயருறுவதில்லை.

64 य — किं नु हित्वाऽर्थवान् भवति ?

ய — எதை விட்டால் மனிதன் பொருளுள்ளவனாகிறான்

यु — कामं हित्वाऽर्थवान् भवति ।

யு — காமத்தை விட்டவன் பொருளுள்ளவனாகிறான். தருமத்திற்கு விரோதமான பலவித விஷய போகங்களை அனுபவிக்க விரும்புவதே காமமாகும்.

65 य — किं नु हित्वा सुखी भवेत् ?

ய — எதை விட்டால் மனிதன் சுகமுள்ளவனாவான்?

यु — लोभं हित्वा सुखी भवेत् ।

யு — பேராசையை விட்டவன் சுகமுள்ளவனாவான்.

ஆக ஒருவன் மனத்தை அடக்குவதற்கு செருக்கு, சினம், காமம், லோபம் ஆகிய நான்கையும் விடுவதே உபாயமாகும். இவை நான்கையும் விடுவதே தரும பலன் ஆகும்.

66 य — किमर्थं ब्राह्मणे दानम् ?

ய — எதற்காக பிராமணனுக்குக் கொடுப்பது ?

यु — धर्मार्थं ब्राह्मणे दानम् ।

யு — அந்தணனுக்குக் கொடுப்பது அறத்திற்காகக் கொடுப்பதாகும்.

67 य — किमर्थं नटनर्तके ?

ய — நடிப்பவருக்கும், நாட்டியமாடுபவருக்கும் கொடுப்பது எதற்காக ?

यु — यशोऽर्थं नटनर्तके ।

யு — புகழுக்காக வேண்டிக் கொடுக்கிறார்கள் நடநர்த்தகர்களுக்கு.

68 य — किमर्थं चैव भृत्येषु ?

ய — எதற்காக வேலைக்காரர்களுக்குக் கொடுப்பது.

यु — भृत्येषु भरणार्थम् ।

யு — வேலைக்காரர்களை வசப்படுத்துவதற்காகக் கொடுக்கிறார்கள்.

69 य — किमर्थं चैव राजसु ?

ய — அரசர்களிடம் எதற்காகக் கொடுப்பது ?

यु — भयार्थं चैव राजसु ।

யு — அச்சம் நீங்குவதற்காக அரசர்களுக்குக் கொடுக்கப்படுகிறது.

ஆக, பிராமணனுக்குக் கொடுப்பது உலக க்ஷேமத்துக்காகச் செய்யப்படும் யாகம் முதலிய காரியமாகிய தர்மத்துக்குக் காரணமாதலால் உலக நலனுக்குப் பயன்படுகிறதென்றும், மற்றையவை அவ்வளவு பயனுடையன அல்ல என்பதும் பெறப்படுகிறது.

70 य — केनस्विदावृतो लोकः ?

ய — எதனால் உலகம் மூடப்பட்டிருக்கிறது ?

यु — अज्ञानेनावृतो लोकः ।

யு — அக்ஞானத்தால் (அறியாமையால்) உலகம் மூடப்பட்டிருக்கிறது.

தானத்தின் வலிமையாலேயே கர்வம் முதலியவற்றை ஜெயித்து மனத்தை அடக்குகிறவனுக்கே துக்க நாசமாகிய மோக்ஷம் வருகிறதென்றால் முன் (59ல்) " த்ரயீதர்மத்தினால் " யாது பயன் என சந்தேகித்து அதற்கு விடை கூறுகிறார் இதில்.

இங்கு உலகம் என்பது ஆத்மா. கயிற்றைப் பாம்பு என மதிப்பதுபோல விபரீத ஞானத்தால் ஆத்மா மறைக்கப்

படுகிறது. அந்த அக்ஞானம் நாசமடைவதற்கு அவசியம் த்ரயீதர்மத்தை அனுஷ்டிக்கவேண்டுமென்கிறார்.

71 தூக்கத்தில் ஸ்தூல ஸூக்ஷ்ம சரீரங்கள் இல்லாமையால் அக்ஞான நாசம் ஏற்படுகிறதே; அவ்வாறிருக்க "த்ரயீ தர்மம்" எதற்கு என ஐயுற்று விடை கூறுகிறார் இனி.

य — केनस्विन्न प्रकाशते ?

ய — எதனால் உலகம் பிரகாசிக்கிறதில்லை ?

यु — तमसा न प्रकाशते ।

யு — தமோகுணத்தால் உலகம் பிரகாசிக்கிறதில்லை.

தமஸ்—மூல அக்ஞானம். அதனால் ஆத்மா மறைக்கப் பட்டு தூக்கத்திலும் பிரகாசிக்கிறதில்லை. ஆகையால் ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண சரீரங்கள் மூன்றையும் லயமடையச் செய்யவேண்டும். ஞானத்துக்கும் அஞ்ஞானத்துக்கும் விரோதமானதால், அக்ஞானத்தினால் ஏற்பட்ட ஸம்ஸாரமானது மனத்தை அடக்குவதால் மட்டும் நசிப்பதில்லை. ஆனால், விபரீத ஞானமெல்லாம் நீங்கி, கயிறு என அறிந்தே ஸர்ப்ப பயம் அடியோடு அழிவதுபோல மூன்று சரீரங்களிலுமுள்ள விபரீத ஞான நிவ்ருத்தியினால் ஆத்ம ஸ்வரூபத்தை அறிந்தே ஸம்ஸாரத்துக்கு அடியோடு நாசம் ஏற்படுகிறது என்பது கருத்து.

72 य — केन त्यजति मित्राणि ?

ய — எக்காரணத்தால் மனிதன் நண்பர்களை விடுகிறான் ?

यु — लोभात् त्यजति मित्राणि ।

யு — பேராசையினால் மனிதன் நண்பர்களை விடுகிறான்.

73 य — केन स्वर्गं न गच्छति ?

ய — எதனால் மனிதன் சுவர்க்கத்தை அடைவதில்லை.

यु — सङ्गात् स्वर्गं न गच्छति ।

யு — பற்றுதலால் சுவர்க்கத்தை அடைவதில்லை.

ஆகையால் லோபத்தையும், உலகப்பற்றையும் விட்டு ஞானத்தை அடையவேண்டும் என்கிறார்.

74 य — मृतः कथं स्यात् पुरुषः ?

ய — மனிதன் எவ்வாறுனால் மாண்டவனாவான் ?

यु — मृतो दरिद्रः पुरुषः ।

யு — தரித்திரனால் மாண்டவனாவான்.

லோபத்தையும், உலகப்பற்றையும் விடாமையால் உண்டாகும் குற்றத்தைக் கூறுகிறார் இதில். தரித்திரன்—லோபசித்தமுள்ளவன். அவன் ஈவதில் (கொடுப்பதில்) திறமையில்லாதவன் ஆதலால் இறந்தவனே ஆவான்.

"சாதலின் இன்னாத தில்லை இனிது அதூஉம்
ஈதல் இயையாக் கடை" என்றார் வள்ளுவரும்.

75 य — कथं राष्ट्रं मृतं भवेत् ?

ய — ராஜ்யம் எவ்வாறுனால் உயிரில்லாததாகும் ?

यु — मृतं राष्ट्रमराजकम् ।

யு — அரசனில்லாததானால் ராஜ்யம் மாண்டதாகும்.

இராச்சியமாகிற உடலுக்கு அரசனே பிராணன். ஆதலால் அரசனில்லாத இராச்சியம் பிராணனையிழந்த உடலையொத்ததாகும்.

"நெல்லு முயிரன்றே! நீருமுயிரன்றே;
மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்"

என்கிறது புறநானூறும்.

76 य — श्राद्धं मृतं कथं वा स्यात् ?

ய — எவ்வாருனல் சிராத்தம் அழிந்ததாகும் ?

यु — मृतमश्रोत्रियं श्राद्धम् ।

யு — வேதாத்யயனம் செய்த பிராமணர்களை வரித்துச் செய்யாத சிராத்தம் நஷ்டமாகும்.

77 य — कथं यज्ञो मृतो भवेत् ?

ய — யாகம் எவ்வாருனல் பயனற்றதாகும்.

यु — मृतो यज्ञस्त्वदक्षिणः ।

யு — தக்ஷிணை இல்லாத யாகம் பயனற்றதாகும்.

78 य — का दिक् ?

ய — எது திக்கு ?

यु — सन्तो दिक् ।

யு — சாதுக்கள் திக்கு ஆவர்.

சாதுக்கள்–வேதத்தையே பிரமாணமாகக்கொண்டவர்கள். திக்கு-வழி (வழிகாட்டி) ஆக வேதத்தையே பிரமாணமாகக்கொண்டவர்களான ஆசார்யர்களின் உபதேசத்தினலேயே பரப்ரம்மத்தை அறியவேண்டும் என்பது கருத்தாகும்.

79 य — किमुदकं प्रोक्तम् ?

ய — எது ஜலம் என்று சொல்லப்படுகிறது ?

यु — जलमाकाशम् ।

யு — ஆகாசம்தான் ஜலமாகும்.

இங்கு ஜலம் என்பது அதன் காரியமான பிண்ட ப்ரம்மாண்டத்தையும், அதில் அபிமானியான ஜீவனையும் குறிக்கிறது. அதனால் ஸமஷ்டியும், வ்யஷ்டியுமான ஜீவன் சொல்லப்பட்டது.

இங்கு ஆகாசம் என்பது "அவ்யாக்ருதம்" என்னும் காரணமும், அதன் அபிமானியாகிய ஈசுவரனுமாவார். "ஆகாசமே ஜலம்" आकाशात् वायुः । वायोरग्निः । अग्नेरापः । என்று வேதம் கூறுவதனால். இதனால் இரண்டிற்கும் அபேதம் கூறப்பட்டது.

80 य — किमन्नम् ?

ய — எது அன்னம்?

यु — गौरन्नम् ।

யு — பசுவானது அன்னம்:

இங்கு गौः (பசு) என்பது இந்திரியங்களும், அவைகளினாலே நுகரக்கூடிய சப்தாதி (சுவை, ஒளி, ஓசை முதலிய) விஷயங்களும் ஆகும். "அன்னம்" என்பது லயம் அடையும்படி செய்யத்தக்கன என்பதாகும். செவி, வாய், கண், மூக்கு, உடல் என்ற ஐம்பொறிகளும் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் இவற்றை நுகருவதில் ஈடுபடுகின்றன.

"சுவையொளி ஊறோசை நாற்றமென் றைந்தின்
வகை தெரிவான் கட்டே யுலகு"

என்றார் திருவள்ளுவரும்.

81 य — किं च वै विषम् ?

ய — எது விஷம் ?

यु — प्रार्थना विषम् ।

யு — பிறர்பால் யாசித்தல் விஷமாகும்.

"ஈயென இரத்தல் இழிந்தன்று" என்கிறது புறநானூறு. ஆசையின் காரணமாகத்தான் யாசிக்க முற்படுகிருன் ஆதலால் அவ்வாசையே விஷமாகும். ஆகையால் ஆசையை விட்டுக் குருவின் உபதேசத்தினுல் உலகத்தை லயப்படுத்தி ஜீவ ஸ்வரூபத்துக்கும், பரமாத்ம ஸ்வரூபத்துக்கும் அபேதத்தை ஸாக்ஷாத்காரம் செய்ய வேண்டும் என்பது கருத்து

82 य — श्राद्धस्य कालमाख्याहि ?

ய — சிராத்தத்துக்குரிய காலத்தைச் சொல்லு.

यु — श्राद्धस्य ब्राह्मणः कालः ।

யு — பிராமணனைக் காண்பதே சிராத்தத்துக்குரிய காலம்.

இங்கு பிராமணன் என்பது பிரம்மத்தை அறிந்தவனைக் குறிக்கிறது. சிராத்தம் என்பது சிரத்தையோடு கொடுப்பது. ஆக ஞானுனுட்டானம் உடையோர்களைக் கண்டதும் தர்மத்தைச் செய்யவேண்டும். ஞானவான்கள் கிட்டிய போது கல்வி கற்கவேண்டும்.

"**कथं वा यक्ष मन्यसे**" என்று இதற்குமேல் தர்மர் கேட்கிருர். இதுவரை பிரம்ம வித்தையை உரிய ஸாதனங்களுடன் சொல்லி முடித்தேனே; இன்னம் நீ என்ன எண்ணுகிருய் என வினவுகிருர். ஞான ஸாதனங்களைத் தருமர் வாயிலாக வெளிப்படுத்துவதற்காக யக்ஷன் அவரது தம்பிகளை எழுப்பித்தரவில்லை. அதனுல் ஞான ஸாதனமான தவம் முதலியன பற்றி இனி வினவுகிருர்.

83 य — तपः किंलक्षणं प्रोक्तम् ?

ய — தவத்திற்குரிய இலக்கணம் யாது ?

यु — तपः स्वधर्मवर्तित्वम् ।

யு — தத்தம் தர்மத்தில் நிலைபெற்றிருத்தல் தவமாகும்,

84 य — को दमश्च प्रकीर्तितः ?

ய — எது தமம் என்று சொல்லப்படுகிறது ?

यु — मनसो दमनं दमः ।

யு — மனத்தை அடக்குதல் தமம் ஆகும்.

85 य — क्षमा च का परा प्रोक्ता ?

ய — எது சிறந்த பொறுமையென்று சொல்லப் படுகிறது ?

यु — क्षमा द्वन्द्वसहिष्णुत्वम् ।

யு — இன்பம் துன்பம், வாழ்வு தாழ்வு முதலியவற்றைப் பொறுத்துக்கொண்டிருத்தல் க்ஷமை (பொறுமை) எனப்படும்.

86 य — का च ह्रीः परिकीर्तिता ?

ய — எது வெட்கமென்று சொல்லப்படுகிறது ?

यु — ह्रीरकार्यनिवर्तनम् ।

யு — செய்யத்தகாத காரியத்தினின்றும் திரும்புதற்குக் காரணமான குணமே வெட்கமாகும்.

“ பழியெனின் உலகுடன் பெறினும் கொள்ளார் ”

என்கிறார் புறநானூற்றில்.

87 य — किं ज्ञानं प्रोच्यते ?

ய — எது ஞானமென்று சொல்லப்படுகிறது ?

यु — ज्ञानं तत्वार्थसंबोधः ।

யு — உண்மைப்பொருளை நன்கறிதலே ஞானமாகும். இதுபற்றியே வான்புகழ் வள்ளுவரும்,

"எப்பொருளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருக்குறள்.

88 य — कः शमश्च प्रकीर्तितः ?

ய — எது சமம் என்று சொல்லப்படுகிறது ?

यु — शमः चित्तप्रशान्तता ।

யு — மனத்தில் மிக்க சாந்தி (அமைதி) உடையவனாயிருத்தல் சமம் எனப்படும்.

89 य — दया च का परा प्रोक्ता ?

ய — எது சிறந்த கருணை என்று சொல்லப்படுகிறது ?

यु — दया सर्वसुखैषित्वम् ।

யு — எல்லா உயிர்களுக்கும் சுகத்தை விரும்புவதே தயை (கருணை) ஆகும்.

90 य — किं च आर्जवमुदाहृतम् ?

ய — எது ருஜுஸ்வபாவம் (நேர்மையான புத்தி) என்று சொல்லப்படுகிறது ?

यु — आर्जवं समचित्तता ।

யு — பகை நட்பு என்ற வேறுபாடின்றி, எங்கும் எல்லாரிடத்தும் ஸமமான நோக்குடைமை தான் "ருஜுஸ்வபாவம்" என்று சொல்லப்படுகிறது.

"தகுதி யெனவொன்று நன்றே பகுதியாற்
பாற்பட் டொழுகப் பெறின்" —என்றார் வள்ளுவரும்.

91 य — कः शत्रु दुर्जयः पुंसाम् ?

ய — மனிதர்களால் வெல்ல முடியாத பகைவன் யார் ?

यु — क्रोधः सुदुर्जयः शत्रुः ।

யு — கோபந்தான் எவ்விதத்திலும் ஜெயிக்கமுடியாத பகைவன்.

" தன்னைத்தான் காக்கின் சினங்காக்க காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம் "— திருக்குறள்.

92 य — कश्च व्याधिरनन्तकः ?

ய — எது முடிவில்லாத வியாதி ?

यु — लोभो व्याधिरनन्तकः ।

யு — பேராசையினும் பெருத்த நோய் எதுவுமில்லை.

" போதுமென்ற மனமே பொன் செயும் மருந்து "
என்பது தமிழ்ப் பழமொழி.

93 य — कीदृशश्च स्मृतः साधुः ?

ய — எப்படி இருப்பவன் ஸாது என்றெண்ணப் படுகிறான் ?

यु — सर्वभूतहितः साधुः ।

யு — எல்லா உயிர்களிடத்தும் அன்பு பூண்டு அவ்வவற்றிற்கேற்ற நன்மை செய்பவனே சாது ஆவான்.

94 य — असाधुः कीदृशः स्मृतः ?

ய — எப்படி இருப்பவன் அஸாது என்று கருதப் படுகிறான் ?

यु — असाधुः निर्दयः स्मृतः ।

யு — தயை இல்லாதவன் அஸாது என்றெண்ணப் படுகிறான்.

இத்தகையோரை,

" கண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோ
டியைந்துகண் ணோடா தவர்

என நிந்திக்கிறார் தெய்வப்புலவர்.

95 य — को मोहः प्रोच्यते ?

ய — எது மோஹம் (மயக்கம்) என்று சொல்லப்படுகிறது?

यु — मोहो हि धर्ममूढत्वम् ।

யு — அறத்தை அறியாதிருத்தலே மோஹமாகும்.

அறமாவது செய்வன, தவிர்வன அறிந்து நடத்தல், ஆக உலகில் செய்யத்தக்கவற்றைச் செய்யாமலும், விட வேண்டியவற்றை விடாமலும் தடுமாறுவதே மயக்கமாகும்.

" செய்தக்க அல்ல செயக்கெடும் செய்தக்க
செய்யாமை யானும் கெடும் " என்பது குறள்

96 य — कश्च मानः प्रकीर्तितः ?

ய — எது மானமென்று சொல்லப்படுகிறது ?

यु — मानस्तु आत्माभिमानिता ।

யு — " நான் " என்னும் செருக்குடையனா யிருத்தலே மானமாகும்.

97 य — किमालस्यं च विज्ञेयम् ?

ய — எது சோம்பேறித்தனமாகும் ?

यु — धर्मनिष्क्रियतालस्यम् ।

யு — தருமத்தைச் செய்யாதிருத்தலே சோம்பேறித்தனம் என்றறியத்தக்கது.

98 य — कश्च शोकः प्रकीर्तितः ?

ய — எது சோகம் என்று சொல்லப்படுகிறது ?

यु — शोकस्तु अज्ञानमुच्यते ।

யு — அக்ஞானமே (அறியாமையே) சோகம் (துயரம்) ஆகும்.

99 य — किं स्थैर्यमृषिभिः प्रोक्तम् ?

ய — ரிஷிகளால் எது "உறுதியான நிலை" என்று போற்றப்பெறுகிறது?

यु — स्वधर्मे स्थिरता स्थैर्यम् ।

யு — ஸ்வதர்மத்தில் (தனக்குரிய குலதர்மத்தில்) நிலைத்துநிற்கை உறுதியாகும்.

"**स्वधर्मे निधनं श्रेयः**" என்கிறார் கீதையில்.

100 य — किं च धैर्यमुदाहृतम् ?

ய — எது தைர்யமென்று சொல்லப்படுகிறது?

यु — धैर्यमिन्द्रियनिग्रहः ।

யு — ஐந்து இந்திரியங்களையும் அடக்குவதே தைரியமாகும்.

"உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து"
— என்கிறது குறள்.

101 य — स्नानं च किं परं प्रोक्तम् ?

ய — எது சிறந்த ஸ்நாநம் என்று சொல்லப்படுகிறது?

यु — स्नानं मनोमलत्यागः ।

யு — மனத்திலுள்ள அழுக்கைப் போக்குவதே சிறந்த ஸ்நாநமாகும்.

"மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற" என்பது வள்ளுவர் வாக்கு.

102 य — दानं च किमिहोच्यते ?

ய — இவ்வுலகில் சிறந்த தானம் என்று எது கூறப் படுகிறது ?

यु — दानं वै भूतरक्षणम् ।

யு — உலகிலுள்ள உயிர்களைப் பாதுகாப்பதே சிறந்த தானமாகும்.

103 य — कः पण्डितः पुमान् ज्ञेयः ?

ய — எந்த மனிதன் பண்டிதனாக அறியத்தக்கவன் ?

यु — धर्मज्ञः पण्डितो ज्ञेयः ।

யு — தர்மங்களை அறிந்தவன் பண்டிதனாவான்.

104 य — नास्तिकः कश्च उच्यते ?

ய — நாஸ்திகனென்று எவன் சொல்லப்படுகிறான் ?

105 य — को मूर्खः ?

ய — எவன் மூர்க்கன் ?

यु — नास्तिको मूर्ख उच्यते ।

யு — பரலோகமில்லை என்று சொல்லுபவன் நாஸ்திகன். அவனே மூர்க்கனுமாவான்.

"உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத் தலகையா வைக்கப் படும்" என்கிறது தமிழ்மறை.

"असन्नेव स भवति । असद्ब्रह्मेति वेद चेत् । अस्ति ब्रह्मेति चेद्वेद । सन्तमेनं ततो विदुः" என்கிறது வேதம்.

106 य — कश्च कामः स्यात् ?

ய — எது காமம் (இச்சை) ஆகும் ?

यु — कामः संसारहेतुः ।

யு — பிறப்பு இறப்புகளுக்குக் காரணமே காமமாகும்.

107 य — को मत्सर इति स्मृतः ?

ய — எது மத்ஸரமென்றெண்ணப்படுகிறது ?

यु — हृत्तापो मत्सरः स्मृतः ।

யு — மனக்கொதிப்பே மத்ஸரமென்று சொல்லப் படுகிறது.

108 य — कोऽहङ्कार इति प्रोक्तः ?

ய — எது அஹங்காரமென்று சொல்லப்படுகிறது ?

यु — महाज्ञानमहङ्कारः ।

யு — பெரிதான அக்ஞானமே (அறியாமையே) அஹங் காரம் என்று சொல்லப்படுகிறது.

109 य — कश्च दम्भः प्रकीर्तितः ?

ய — எது டம்பம் என்று சொல்லப்படுகிறது ?

यु — दम्भो धर्मध्वजोच्छ्रयः ।

யு — தர்மத்தைத் தான் அனுஷ்டிப்பதாகக் கொடிகட்டி (விளம்பரப்படுத்தி) எல்லாருக்கும் தெரிவிப்பதுதான் டம்பமென்று சொல்லப்படுகிறது.

110 य — किं तद्दैवं परं प्रोक्तम् ?

ய — எது அப்படிப்பட்ட சிறந்த தைவமாக (அதிருஷ்டம்) சொல்லப்படுகிறது ?

यु — दैवं दानफलं प्रोक्तम् ।

யு — தானத்தின் பலன் தான் தைவம் (அதிருஷ்டம்) என்று சொல்லப்படுகிறது.

111 य — किं तत्पैशुन्यमुच्यते ?

ய — எது அத்தகைய பிசுன ஸ்வபாவம் என்று கூறப்படுகிறது?

பிசுனன் = கோள் சொல்லுபவன், புறங்கூறுபவன்.

यु — पैशुन्यं परदूषणम् ।

யு — அயலாரை நிந்திப்பதுதான் பிசுனஸ்வபாவம் என்று சொல்லப்படுகிறது.

ஆக இதுகாறும் கூறியவாற்ருல் ஒரு மனிதன், அஹங்காரம், டம்பம், பிசுனஸ்வபாவம் இவற்றை விட்டுவிட்டு, தெய்வத்துக்கடங்கி, கிடைத்ததைக் கொண்டு மனநிறைவடைந்து, ஆடம்பரமில்லாமல் பயனில் விருப்பமில்லாது தர்மத்தைக் கடைப்பிடிக்கவேண்டும் என்பது பெறப்பட்டது.

அர்த்தமும், காமமும் தர்மத்துக்கு விரோதமாகையால் தர்மம் கடைப்பிடிக்கமுடியாததல்லவா என ஐயுற்று விடை காண்கிருர் இனி.

112 य — धर्मश्चार्थश्च कामश्च परस्परविरोधिनः ।
एषां नित्यविरुद्धानां कथमेकत्र सङ्गमः ॥

ய — தர்மமும், அர்த்தமும், காமமும் ஒன்ருேடொன்று விரோதமுள்ளவையாயிற்றே. எப்பொழுதும் விரோதமுள்ள இவைகளுக்கு ஓரிடத்தில் சேர்க்கை எவ்வண்ணமுண்டாகும்?

यु — यदा धर्मश्च भार्या च परस्परवशानुगौ ।
तदा धर्मार्थकामानां त्रयाणामपि सङ्गमः ॥

யு — எப்பொழுது அறமும், மனைவியும் ஒருவர்க்கொருவர் அனுசரித்து நடப்பார்களோ அப்பொழுது தர்மார்த்தகாமங்கள் மூன்றுக்கும் சேர்க்கை உண்டாகிறது.

தர்மமானது ஸந்யாஸத்தைப்போல மனைவியோடு சேர்ந்திருப்பதற்கு விரோதமாகிறதில்லை. இல்லறத்தின் தருமமாவது அக்நிஹோத்ரம் முதலியன ஆகும். கணவன் தான் தருமங்கள் செய்ய முற்படுங் காலத்து மனைவி தடை சொல்லாமல் தர்மவிரோதியாகாமல் அவற்றிற்கு உடன்பட்டு இருப்பாளேயானால் தருமம் சிறந்த அர்த்தங்களை (பொருள்களை) உண்டாக்கித் தரும். மனைவியும் விரும்பியதைச் செய்வாள். அதனால் தர்மார்த்தகாமங்கள் சேர்க்கைபெறும். ஆகையால் இல்லறத்தை மேற்கொண்டொழுகுபவனுக்கு தருமத்தின் வழியே மோக்ஷம் அடைய அதிகாரமுண்டு என்பது பெறப்படுகிறது.

113 य — अक्षयो नरकः केन प्राप्यते भरतर्षभ ?

ய — அழிவில்லாத நரகம் எம்மனிதனால் அடையப் படுகிறது ?

यु — ब्राह्मणं स्वयमाहूय याचमानमकिञ्चनम् ।
पश्चान्नास्तीति यो ब्रूयात् सोऽक्षयं नरकं व्रजेत् ॥

वेदेषु धर्मशास्त्रेषु मिथ्या यो वै द्विजातिषु ।
देवेषु पितृधर्मेषु सोऽक्षयं नरकं व्रजेत् ॥

विद्यमाने धने लोभात् दानभोगविवर्जितः ।
पश्चान्नास्तीति यो ब्रूयात् सोऽक्षयं नरकं व्रजेत् ॥

அழிவில்லாத நரகத்துக்குக் காரணமான அஸுரத் தன்மைகள் பலவற்றைக் கூறுகிறார் தருமநந்தனர்.

யு — (1) பொருள் சிறிதுமில்லாத நிலையில், யாசிப்பதற்கு வந்துள்ள பிராமணனைப் பொருள் தருவதாகத் தானே வலியக் கூப்பிட்டுப் பிறகு இல்லையென்று எந்த மனிதன் சொல்லுகிறானோ அவன் அழிவில்லாத நரகத்தை அடைவான்.

(அழிவில்லாத நரகமாவது நித்யஸம்ஸாரியா யிருத்தல், பிறப்பு இறப்புக்களில் இடைவிடாது உழலுதல்.)

(2) எவன் வேதங்களின் பொருளைக் கூறுவதிலும் தருமசாஸ்திரங்களை எடுத்துச் சொல்வதிலும், பிராமணர்களிடத்திலும், தேவர்களிடத்திலும், பித்ரு கார்யங்களிலும் பொய்யைச் சொல்லுவானோ அவன் அழிவில்லாத நரகத்தை அடைவான்.

(3) பணமிருக்கும்போதே பேராசையினால் பிறருக்கு கொடாமலும், தானும் அனுபவியாமலும், யாசிப்பவனுக்குக் கொடுப்பதாகச் சொல்லிவிட்டுப் பிறகு இல்லை என்று எவன் சொல்லுவானோ அவன் அழிவில்லாத நரகத்தை அடைவான்.

114 य — राजन् कुलेन वृत्तेन स्वाध्यायेन श्रुतेन वा ।
ब्राह्मण्यं केन भवति प्रब्रूह्येतत् सुनिश्चितम् ॥

ய — பிராம்மண்யமானது குலத்தினாலேயா, ஒழுக்கத்தினாலேயா, வேதம் ஓதுவதனாலேயா, சாஸ்திர ஞானத்தினாலேயா எதனாலுண்டாகிறது?

यु — शृणु यक्ष कुलं तात न स्वाध्यायो न च श्रुतम् ।
कारणं हि द्विजत्वे च वृत्तमेव न संशयः ॥

वृत्तं यत्नेन संरक्ष्यं ब्राह्मणेन विशेषतः ।
अक्षीणवृत्तो न क्षीणो वृत्ततस्तु हतो हतः ॥

पठकाः पाठकाश्चैव ये चान्ये शास्त्रचिन्तकाः ।
सर्वे व्यसनिनो मूर्खाः यः क्रियावान् स पण्डितः ॥

चतुर्वेदोऽपि दुर्वृत्तः स शूद्रादतिरिच्यते ।
योऽग्निहोत्रपरो दान्तः स ब्राह्मण इति स्मृतः ॥

யு — பிராம்மண்யத்திற்குக் குலமோ, வேதத்தை மட்டிலும் முழுதும் கற்றலோ (பொருளுணராத வகையில்), சாஸ்திரங்களைப் பயின்று வேதத்தின் பொருளை உணர்தலோ காரணமாகா; ஒழுக்கமே காரணமாகும். இதில் சிறிதும் ஐயமில்லை. ஆகையால் வெகு முயற்சியுடன் ஒழுக்கத்தைக் காப்பாற்றிக்கொள்ளவேண்டும். ஒழுக்கம் குன்றாத பிராமணனே சிறந்தவனாவான். ஒழுக்கம் கெட்டவன் கெட்டவனே. இதுபற்றியே வள்ளுவரும்,

"மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்" என்றார்

கற்பவர், கற்பிக்கிறவர், இன்னும் மற்றுமுள்ள சாஸ்திரங்களை ஆராய்பவர் ஆகிய அனைவரும் அதாவது அவற்றைக் கற்கையே பெரும் பயனாக எண்ணி அதையேபற்றி நிற்கிறவர் மூடர்களேயாவர் எவன் கற்றபடி நடக்கிறானோ அவன்தான் பண்டிதனாவான். இதுகுறித்தே வான்புகழ் வள்ளுவரும்,

"கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக" என்றார்

நான்கு வேதங்களையும் கற்றவனாயிருந்தபோதிலும், கெட்ட ஒழுக்கமுள்ளவனாக இருப்பானானால் அவன் நான்காம் வருணத்தவரினும் இழிந்தவனாவான். எவன் அக்னிஹோத்ரம் முதலிய வைதிக காரியங்களில் ஈடுபாடு உள்ளவனாகவும், இந்திரியங்களை அடக்கி யாள்பவனாகவும் உள்ளானோ அவனே பிராமணனாக மதிக்கப்படுகிறான்.

115 य — प्रियवचनवादी किं लभते ?

ய — இன்சொற் சொல்பவன் எதை அடைகிறான் ?

यु — प्रियवचनवादी प्रियो भवति ।

யு — இன்சொற் சொல்லுபவன் எல்லாருக்கும் நண்பனுகிருன்.

वाङ्माधुर्यात् सर्वलोकप्रियत्वं वाक्पारुष्यात् सर्वलोकाप्रियत्वम् ।
को वा लोके कोकिलस्योपकारः को वा लोके गर्दभस्यापकारः ॥

என்கிற நீதிசுலோகமும் இக்கருத்தையே வெளியிடுகிறது.

116 य — विमृशितकार्यकरः किं लभते ?

ய — ஆலோசித்துச் செயலாற்றுபவன் எதை அடைகிருன் ?

यु — विमृशितकार्यकरोऽधिकं जयति ।

யு — நெடிதாராய்ந்து செயலாற்றுபவன் எதிலும் வெற்றியே பெறுவான்.

117 य — बहुमित्रकरः किं लभते ?

ய — பலரையும் நண்பர்களாகச் செய்துகொள்ளுபவன் எதை அடைகிருன் ?

यु — बहुमित्रकरः सुखं वसते ।

யு — நண்பர் பலரைக் கொண்டவன் சுகமாக வாழ்கிருன்.

118 य — धर्मरतः किं लभते कथय ?

ய — தர்மத்தில் பற்றுதலுள்ளவன் எதை அடைகிருன்?

यु — यश्च धर्मरतः स गतिं लभते ।

யு — தர்மத்தில் பற்றுள்ளவன் நல்ல கதியை அடைகிருன்.

119 य — को मोदते ?

ய — எவன் ஸந்தோஷமாக வாழ்கிருன் ?

यु — पञ्चमेऽहनि षष्ठे वा शाकं पचति स्वे गृहे ।
अनृणी च अप्रवासी च स वारिचर मोदते ।

யு — எந்த மனிதன் கடனில்லாதவனாகவும், பிழைப்பிற்காக வேற்று நாட்டிற்குச் செல்லாதவனாகவும், பகலில் பன்னிரண்டு மணியிலிருந்து இரண்டு மணிக்குள் தன் வீட்டில் சமைத்த கீரையும் சோறுமாவது உண்பவனாகவும் உள்ளானோ அவன் தான் ஸந்தோஷத்தை அடைகிறான்.

120 य — किमाश्चर्यम् ?

ய — எது ஆச்சர்யம் ?

यु — अहन्यहनि भूतानि गच्छन्तीह यमालयम् ।
शेषाः स्थावरमिच्छन्ति किमाश्चर्यमतः परम् ॥

யு — இவ்வுலகில் நாள்தோறும் உயிர்கள் யமனுலகு நோக்கிச் சென்றவண்ணமிருக்கின்றன. இதைக் கண்கூடாகக் கண்டும், எஞ்சியுள்ள மாந்தர்கள் ஒவ்வொரு நாளும் "இவ்வுடப்பு அழியக்கூடியது" என்பதை நினைந்து, இருக்கும் நாளிலே மோக்ஷத்தை அடைவதற்குரிய முயற்சியை விரைந்து செய்ய வேண்டியதிருக்க, அதை விட்டுவிட்டு, சுகானுபவங்களில் மூழ்கி, தாங்கள் நிலையானவர்கள் என்றெண்ணி இறுமாந்திருக்கிறார்களே ; இதனினும் ஆச்சரியம் எது இருக்கிறது ?

"செத்த பிணத்தைக் கண்டு சாம்போம் பிணங்கள்
அழுகின்றனவே" என்கிறார் பட்டினத்தடிகள்.

"நெருதல் உளனொருவன் இன்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு"—என்கிறார் வள்ளுவரும்.

121 य — कः पन्थाः ?

ய — எது வழி ?

यु — तर्कोऽप्रतिष्ठः श्रुतयो विभिन्नाः
नैको ऋषिः यस्य मतं प्रमाणम् ।
धर्मस्य तत्वं निहितं गुहायां
महाजनो येन गतः स पन्थाः ॥

யு — யுக்திவாதமானது நிச்சயிக்கத்தகாதது. வேதங்களோ ஒன்றோடொன்று மாறுபட்ட பொருளைச் சொல்லக்கூடியனவாக உள்ளன. எந்த ஒரு ரிஷியினது கொள்கையைப் பின்பற்றுவோமென்று பார்த்தாலும் அந்த ரிஷி ஓரிருவரல்லர். அறத்தின் தத்துவமோ மறைபொருளாகவே உள்ளது. இவ்வளவு குழப்பங்களிருக்க, ஒருவன் நல்வாழ்வு பெற சுலபமான வழி யாதெனின் நமது மூதாதையர்களான சான்றோர்கள் எந்த வழியைக் கடைப்பிடித்துள்ளார்களோ அதுவே நமக்கும் நல்வழியாகும்.

"எவ்வ துறைவ துலக முலகத்தோ
டவ்வ துறைவ தறிவு" என்கிறார் வள்ளுவர்.

122 य — का च वार्तिका ?

ய — எது தினமும் நடக்கிற நிகழ்ச்சி ?

यु — अस्मिन् महामोहमये कटाहे
सूर्याग्निना रात्रिदिवेन्धनेन ।
मासर्तुदर्वीपरिघट्टनेन
भूतानि कालः पचतीव वार्ता ॥

யு — பூமியானது சமையல் செய்யக்கூடிய பெரிய பாத்திரமாகும். ஆகாயம் அதற்குத் தகுந்த மூடி. காலம் என்கிற சமையற்காரன், தாவரஜங்கமங்களான எல்லா வஸ்துக்களையும் அதில் போட்டு,

இரவு பகலாகிற விறகை வைத்து, சூரியனாகிய நெருப்பை மூட்டி, மாதங்களும் ருதுக்களுமாகிய கரண்டிகளால் நன்றாகக் கிளறிப் பக்குவம் பண்ணு கிறான் என்பதுதான் நாள்தோறும் நடந்து வருகிற நிகழ்ச்சியாக உள்ளது.

123 य — पुरुषं तु इदानीं व्याख्याहि ?

ய — ஜீவித்திருப்பவனையும், எல்லா விருப்பங்களையும் அடைந்தவனையுமுள்ள எவன் புருஷன் என்று போற்றப்படுகிறான் ?

यु — दिवं स्पृशति भूमिं च शब्दः पुण्येन कर्मणा ।
यावत् स शब्दो भवति तावत् पुरुष उच्यते ॥

யு — பயனில் பற்றில்லாமலோ, பற்றுடனோ செய்யும் புண்ணியகாரியங்களினால் உண்டாகும் புகழ்ச்சொல் மண்ணுலகிலும், விண்ணுலகிலும் பரவுகிறது. அந்தப் புகழ்ச் சொல்லானது எது வரையிலிருக் கிறதோ அது வரையில் ஒருவன் புருஷன் என்று போற்றப்படுகிறான்.

124 य — यश्च सर्वधनी नरः ?

ய — எவன் எல்லாப்பொருளுமுள்ள மனிதனாவான்?

यु — तुल्ये प्रियाप्रिये यस्य सुखदुःखे तथैव च ।
अतीतानागते चोभे स वै सर्वधनी नरः ॥

भूतभव्यभविष्येषु निःस्पृहः शान्तमानसः ।
सुप्रसन्नः सदा योगी स वै सर्वधनी नरः ॥

யு — எந்த மனிதன் விருப்பு வெறுப்புகள், இன்ப துன்பங்கள், சென்றது வருவது, ஆகிய அனைத்தை யும் ஸமமாக பாவிக்கிறானோ அவனே பிரம்மஞானி

ஆகிறான். எல்லாப்பொருளும் உள்ளவன் என்று போற்றவும் பெறுகிறான்.

எந்த மனிதன் எல்லா வஸ்துக்களிடத்திலும் ஸம புத்தியுள்ளவனாகவும், முக்கால நிகழ்ச்சிகளிலும் பற்றற்றவனாகவும், ஆசையற்றவனாகவும், சாந்தமான மனமுள்ளவனாகவும், மிக்கத் தெளிவுள்ளவனாகவும், எப்பொழுதும் பரப்ரம்மத்தையே தியானிப்பவனாயுமிருக்கிறானோ, அவனே எல்லாப் பொருளுமுள்ளவனாகிறான்.

ஃ ஃ ஃ

யக்ஷன் மிகவும் மனமகிழ்ந்து, 'தருமநந்தனா! அனைத்து வினாக்களுக்கும் அருமையாக விடையளித்தாய்; மிக்க மகிழ்ச்சி. இறந்த தம்பியர் நால்வரில் ஒருவனைப் பிழைப்பிக்கிறேன். நால்வரில் எவன் பிழைத்தெழவேண்டும்; இயம்புவாயாக' என்றான். தருமர் 'யக்ஷ! அப்படியானால் கரியநிறமும், சிவந்த கண்ணும், பரந்த மார்பும், திரண்ட தோளும், நெடிதோங்கிய உருவமும் கொண்ட என் தம்பி நகுலன் பிழைக்கட்டும்' என்றார். அது கேட்டு வியந்த யக்ஷன், 'தருமா! அன்புமிக்க அர்ஜுனனையோ, ஆண்மை மிக்க பீமனையோ, விரும்பாமல் நகுலனை விரும்பியதன் காரணம் யாதோ?' என்றது. தருமர், 'யக்ஷ! அறமானது காப்பவனைக் காக்கிறது; அழிப்பவனை அழிக்கிறது. நான் மாத்ரீ, குந்தி இருதாயாரையும் சமமாக எண்ணக்கூடியவன் குந்திக்கொரு பிள்ளை நான் பிழைத்திருக்கிறேன். ஆதலால் மாத்ரிக்கொரு பிள்ளையாக நகுலன் பிழைக்கட்டும் என்றேன்' என்றார். அது கேட்டுப் பெரிதும் மகிழ்ந்த யக்ஷன், 'தருமா! உனது தம்பியர் நால்வருமே பிழைப்பாராக' என்றது.

தருமர், 'யக்ஷ! உண்மையில் நீ யார்? சாமான்ய யக்ஷனாக நீ இருக்கமுடியாது' என்றார். யக்ஷன், 'தருமா! நான் தான் உன் தந்தையாகிய தருமதேவதை; நீ எனது அருமை

மகன்; உன்னைக்காணவே இங்கு வந்தேன். மிக்க மகிழ்ச்சி. நீ விரும்பும் வரங்களைக் கேட்பாயாக' என்றார்.

தருமபுத்திரர் தன் தந்தையிடம் முதல்வரமாக அந்தணனது அரணியுடன்கூடிய கடைகோலைப்பெற்றார். இரண்டாவதாக பதின்மூன்றாவதாண்டு மறைந்து வாழும் காலத்து எவரும் எங்களை அறிந்துகொள்ளாதபடி வரம் நல்குவீராக என்றதற்கு, விராட நகரத்தில் அவ்வாறே சுய உருவில் நீங்கள் சென்றாலும் எவரும் உங்களைக் காண முடியாது என வரம் நல்கினார். மூன்றாவதாக, 'நான் எப்பொழுதும் லோபம், மோஹம், கோபம் இவற்றை வெல்லக்கடவேன்; தானத்திலும், தவத்திலும், ஸத்யத்திலும் என் மனமானது எப்பொழுதும் பற்றுதலுள்ளதாக இருக்க வேண்டும்' என்றார். தருமராஜன், 'யுதிட்டிரா! இக்குணங்களனைத்தும் இயற்கையிலேயே உன்பால் உள்ளன; நீ அறமே வடிவெடுத்தவன்; நீ சொன்னவண்ணம் உனக்கு மேலும் எல்லா நன்மைகளும் உண்டாகுக' என்று சொல்லி மறைந்துவிட்டார்.

इदं समुत्थानसमागतं महत् पितुश्च पुत्रस्य च कीर्तिवर्धनम् ।
पठन्नरः स्यात् विजितेन्द्रियो वशी सपुत्रपौत्रः शतवर्षभाग्भवेत् ॥

न चाप्यधर्मे न सुहृद्विभेदने परस्वहारे परदारमर्शने ।
कदर्यभावे न रमेन्मनः सदा नृणां सदाख्यानमिदं विजानताम् ॥

தந்தைக்கும் தனயனுக்குமிடையே நிகழ்ந்த இவ்வுரையாடல் தம்பிமார்களைப் பிழைக்கச்செய்தது. இதனைப்படிப்பவர்களும், கேட்பவர்களும், மிக்க புகழ் எய்துகின்றனர். ஐம்புலன்களையும் வெல்லுமாற்றல் பெற்றவராய், தன்சொற்கேட்கும் சிறப்புமிக்க புத்திரபௌத்திரர்களைப் பெற்றவராய் பல நூறு ஆண்டுகள் சீரும் சிறப்புமாய் வாழ்வர்.

இந்த நல்ல கதையை அறிகின்ற மாந்தர்களின் மன மானது தருமத்தினின்றும் தவருது; மித்திரபேதம், பிறர் பொருளைக் கவர்தல், பிறர் மனை நயத்தல் முதலிய பாவச் செயல்களில் பற்றுக்கொள்ளாது, தருமதேவதையின் அரு ளால் அனைத்து நலன்களும் அடையப்பெறுவர்.

*மங்களம்.*

